# இஸ்லாத்தின் மூலக்கலைச்சொற்கள்

*உருதுமூலம் : அல்லாமா, முப்தி அஹ்மத்யார்கான் றஹ்மத்துள்ளாஹிஅலைஹி*

*தமிழில் : மௌலவி, பாஸில் : ஏ.எல். பதுறுத்தீன் ஷர்க்கி பரேலவி*

---

*காலம் நவீனமானது. இக்காலத்தில் வாழுகின்ற மக்களின் முறையும் நவீனத்தையே விரும்புகின்றது.*

*தற்காலத்தில் ஒவ்வொருபொருளிலும் நவீனத்தை மிகவும் பிரியத்துடன் விரும்புகின்றனர் நவீனத்தை விரும்புகின்ற சிலர் தௌஹீது கோட்பாட்டுக்கு புதியவிளக்கம் பகரத்தொடங்கியுள்ளனர்..*

*றிஸாலத், நுபுவ்வத் ஈமான் உள்ளிட்டவையை புதிய புதிய கிண்ணங்களில் பருகத்தொடங்கியுள்ளனர், இவர்களின் தவறான விளக்கங்களினால் மக்கள் தவறான வழியில் செல்லத்தொடங்கியுள்ளனர் இதனால்*

***(1) இலாஹ் (2)றஸூல் (3) நபி (4) ஈமான்***
*ஆகிய நான்கும் தான் இஸ்லாத்தின் மூலக்கலைச்சொற்களாகும்.*

*இஸ்லாத்தின் அடிப்படை இம்மூலக்கலைச்சொற்களுக்கு நாம் 13நூற்றாண்டுகளாக நம்பிவந்த கருத்துக்களை மக்கள் மன்றத்தில் முன்வைக்கவேண்டிய அவசியம் நமக்கு ஏற்பட்டுள்ளது.*

*இஸ்லாத்தின் அனைத்து கட்டிடங்களையும் தாங்கிநிற்பது தௌஹீது, றிஸாலத் ஆகிய இரண்டையும் உள்ளடக்கிய அகீதா தான் என்பதை யாவரும் நன்கு அறிவர்.*

*லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாத்தைய்யிபா திருக்கலிமாவை மொழிவதன் மூலமே அனைவரும் முஸ்லிம்களாகின்றனர். என்பதுதெளிவாகின்றது.*

*இந்ததிருக்கலிமாவின் உறவில் இலாஹ் என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்பதை இப்போது உங்கள் முன்வைக்க விரும்புகின்றோம்.*

*உலூஹிய்யத்தின் மூலச்சக்கரம் எதில் தங்கியுள்ளது?*
*உலூஹிய்யத்தையும், அடிமைத்துவத்தையும் வேறுபடுத்தும் வஸ்த்து எது?*
***லாஇலாஹஇல்லல்லாஹ்** என்பதில் உள்ள **இலாஹ்** என்ற சொல் யாரைக்குறிக்கும்?*

*இலாஹ் என்பதன் இன்றியமையாப் பண்புகள் எவை? என்பவை இந்நூலின் ஆய்வுக்குரியவையாகும்.*

*சிலரின்கருத்தின் படி இலாஹ்வின். இன்றியமையாத பண்புகளாக பின்வருபவற்றை வரிசைப்படுத்துகின்றனர்.*

*(1) இலாஹ் என்பவர் மறைவானவற்றை அறிபவர்,*
*(2) இலாஹ் என்பவர் ஹாழிர் – நாழிர் ( எங்கும் இருப்பவர். எல்லாவற்றையும் பார்ப்பவர்)*
*(3) குழந்தைவரம் கொடுப்பவர்*
*(4) நோய் நிவாரணம் அளிப்பவர்*
*(5) கஷ்டமான நேரங்களில் உதவி செய்பவர்*

*(6) அபயமளிப்பவர்*
*(7) தூரத்தில் உள்ளவற்றைக் கேட்பவர்*

*மேற்கண்ட பண்புகளை தன்னகத்தே கொண்டிருப்பவர்தான் - இலாஹ் – என்று இவர்கள் முடிவு செய்துள்ளனர். இதற்குப்பிரதான காரணம்*

**நபிமார்கள் வலிமார்கள்.**

*குறிப்பாக நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் உள்ளிட்டோருக்கு மேற்கண்ட பண்புகள் இருப்பதாக முஸ்லிம்கள் நம்புகின்றனர்,*

*இவர்களின் (வஹாபி,தேவ்பந்தி) கருத்தின்படி இலாஹுவின் மேற்கண்ட பண்புகள் மேற்கண்டவர்களுக்கும் இருப்பதாக நம்புபவர்கள் முஷ்ரிக்குகளாகி விட்டனர் என்று வாதிக்கின்றனர்.*

*அரபுநாட்டு முஷ்ரிக்குகளும் அவர்கள் வணங்கிய சிலைகளுக்கு இதே தகுதிகள் இருப்பதாகவே நம்பியிருந்தனர். அதனால் தான் அவர்கள் முஷ்ரிக்குகளாக ஆனார்கள். இவ்வாறு தான் சங்கையான நபிமார்களுக்கும் வலிமார்களுக்கும் மேற்கண்டபண்புகள் இருப்பதாக நம்புகின்ற முஸ்லிம்களும் அறபுநாட்டு முஷ்ரிக்குகள் போன்றே ஷிர்க்கில் மாட்டிக்கொண்டுள்ளனர்.*

*பித்அத்வாதிகளான வஹாபி தேவ்பந்திகள் கூறுவது போன்று இலாஹ்வுக்கான பொருள் இதுவல்ல என்பதை மிகத்தெளிவாக நாம் நிரூபிப்போம்.*

*உலூஹிய்யத்தின் மூலச்சக்கரம் இப்படியான பண்புகளில் நிச்சயமாக சுழலவில்லை*

*உலூஹியத்தின் பொருள் இவர்கள் கூறுவது போன்று இருக்குமாயின் திருக்குர்ஆனின் வெளிச்சத்தில் பலஇலட்சம் இலாஹுகள் இருப்பதை நாம் ஏற்க வேண்டும். அடுத்து இவர்கள் கூறுகின்ற இலாஹுக்கான தகுதிகள் ஒவ்வொன்றையும் நமது ஆய்வுக்கு எடுப்போம்.*

***1. மறைவானவற்றை அறிதல்***

*மறைவானவற்றை அறியும்ஞானம் உலூஹிய்யத் என்ற இலாஹுவின் அடிப்படைப்பண்பு என்பது உண்மையாயின், திருக்குர்ஆனின் கூற்றுப்படி நபிஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை - இலாஹ் – என்று ஏற்றுக்கொள்ளவேண்டும்.*

*திருக்குர்ஆன் கூறுகின்றது*

*நபிஈஸா அலைஹிஸ்ஸலாம் தனது சமுகத்தைப்பார்த்து*

وانبءكم.بما.تاءكلون.وما.تدخرون .في.بيو.تكم

*நீங்கள்சாப்பிடுவதையும், உங்கள் இல்லங்களில் நீங்கள் பதுக்கிவைத்திருப்பதையும் உங்களுக்கு நான் கூறுவேன். 3 - 49*

*திருக்குர்ஆனில் வரும் – நீங்கள் சாப்பிடுதல், நீங்கள் பதுக்கி வைத்திருத்தல் என்ற இருசொற்களும் எதிர்காலத்தையும், நிகழ்காலத்தையும் குறிப்பவையாகும். இதன்படி உங்கள் வீட்டின் முலைமுடுக்குகளிலும், மறைவான இடங்களிலும் மற்றும் வேறு இடங்களிலும் இருந்துகொண்டு உண்பவை, உண்ண இருப்பவை, பதுக்கிவைத்திருப்பவை, பதுக்கநினைத்திருப்பவை உள்ளிட்டயாவற்றையும் உங்களுக்கு நான் தெரியப்படுத்துவேன்.*

*வயல்களில் தானியங்கள் விளைகின்றன... தோட்டத்தில் கனிகள் காய்க்கின்றன,, ஒவ்வொருதானியத்திலும், கனியிலும், அதனைச்சாப்பிடுபவரின் பெயர்குறிக்கப்பட்டிருக்கின்றது. அதனால், அதில் பொறிக்கப்பட்டிருக்கும் பெயர்களையும் நான் கூறுவேன்.*

*நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹுத்தஆலா எவ்வளவு பெரிய விசாலமான அறிவை வழங்கியுள்ளான் என்பதை சிந்தித்துப்பாருங்கள்.*

*மறைவானவற்றை அறிவது உலூஹிய்யத்தின் மூலப்பண்பு என்றிருக்குமாயின், திருக்குர்ஆனின் வெளிச்சத்தில் மஸீஹ் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் இலாஹ் என்று கூறவேண்டிவரும்.*

*மஆதல்லாஹ்...*

***2. அகிலத்தில் ஆட்சி அதிகாரம் செலுத்துதல்***

*உலகில் அதிகாரம் செலுத்துதல், சூரியன், சந்திரன் நீர்நிலைகள் உள்ளிட்டவையை தனது கட்டுப்பாட்டில் வைத்திருத்தல் "இலாஹூ –வின்தனிப்பெரும் பண்பு என்றால், நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களை திருக்குர்ஆனின் வெளிச்சத்தில் - இலாஹ் – என்று ஏற்க வேண்டிவரும்,*

*நபிசுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பற்றி திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.*

وسخرنا لہ الريح تجري بامرہ رخاء حيث اصاب...۳۸. ۳۶

*ஆகவே, அவருக்கு காற்றை நாம் வசப்படுத்திக்கொடுத்தோம். அவரின் கட்டளைப்படி அவர் நாடிய இடத்திற்கு மிருதுவாக அது (அவரைச்சுமந்து) செல்லும், 38: 36 மேலும்*

وسخرنا لہ الريح عاصفة تجري بامرہ

*ஸுலைமானுக்கு வேகமாகச் செல்லக்கூடிய காற்றையும் (வசப்படுத்திக்கொடுத்தோம்) அவரின் கட்டளையைக் கொண்டு எதில் பரக்கத் செய்திருந்தோமோ அந்தப்பூமியின் பால் அது அவரைக்கொண்டு செல்லும். 21- 81*

*வடக்கு, தெற்கு மற்றும் அனைத்து திசைகளிலிருந்தும் வீசுகின்ற தென்றல் சூறாவளி உள்ளிட்ட அனைத்து வகையான காற்றுகளும் சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கட்டளைப்படி இயங்குகின்றன. என்பதை இதன் மூலம் தெளிவாகத்தெரிந்து கொள்கின்றோம்.*

*மழையை உருவாக்குவதும் மழையை எடுத்துச்செல்வதும் காற்றுத்தான் என்பது வெளிப்படை இதன் படிமழையும் சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வசப்பட்டிருந்தது.*

*மழையால் புற்பூண்டுகள் முளைக்கின்றன, அனைத்து விலங்குகளுக்கான உணவும் இவற்றிலிருந்தே கிடைக்கின்றன. இந்த வகையில், அகிலத்தின் அனைத்து வகையான நிருவாகத்தையும் சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கட்டளைப்படி இயங்கக்கூடியதாக அல்லாஹுத்தஆலா ஆக்கிவிட்டான்.*

*உலூஹிய்யத் என்ற இலாஹ்க்கு இவர்கள் கூறும் விதிப்படி சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் - இலாஹ் – என்று ஏற்கவேண்டிவரும் நஊதுபில்லாஹிமின்ஹா...*

الهرسولنبيايمان

**நோய் நிவாரணம் வழங்கல்**

*நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் எகிப்தில் ஆட்சி செய்து கொண்டிருக்கும் போது எகிப்து முழுவதும் கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. பஞ்சம் வரும் என்பதை முன்கூட்டியே அறிந்த யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் பல்லாண்டுகளாக தானியங்களைச் சேமித்து - வைத்திருந்தார்கள். பஞ்சம் கடுமையாகி உண்ண உணவில்லாமல் மக்கள் கஷ்டப்பட்டபோது. களஞ்சியத்திலிந்த தானியங்களை மக்களுக்கு பங்கிட்டு மக்களின் பட்டினியை அகற்றினார்கள்.*

*இதைக்கேள்விப்பட்ட எகிப்து நாட்டவர்களும், அயல் நாட்டவர்களும் ஹளறத் யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அவைக்கு படையெடுத்தனர், இதனைக்கேள்விப்பட்ட நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் தனது புதல்வர்களை தானியம் வாங்குவதற்கு எகிப்துக்கு அனுப்பிவைத்தார்கள்.*

*ஹளரத் யூஸுஃப் நபியின் ஆட்சி பீடத்திற்குவந்து சேர்ந்த இவர்களை நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் இனம் கண்டு தனது தந்தை யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சுகநலன்கள் பற்றி விசாரித்தார்கள்.*

*மகன் யூஸுஃபின் பிரிவை நினைத்து நினைத்து அழுதழுது பார்வையிழந்திருப்பதாக அவர்கள் பதில் கூறினர் அப்போது தன்னிடமிருந்த அங்கியை சகோதரர்களிடம் கொடுத்து அதனை தந்தையின் கண்ணில்போடுங்கள். பார்வை திரும்பிவிடும் என்று கூறினார்கள்.*

*(இப்றாஹீம் நபியவர்களை நெருப்பில் வீசப்பட்டபோது அவர்கள் அணிந்திருந்த ஆடை தீயில் கருகிவிட்டது. உடனே ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் சொர்க்கத்திலிருந்து பட்டாடையைக் கொண்டுவந்து அணிவித்தார்கள். இவ்வாடையை நபி யாகூப் அலைஹிஸ்ஸலாம் நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கழுத்தில் - தஃ வீஸாகப் போட்டார்கள்.*

*யூஸுஃப் நபியவர்களை அவர்களின் சகோதரர்கள் காட்டுக்கு அழைத்துச்சென்று அவர்களின் ஆடையைக் கழட்டியெடுத்துவிட்டு நிர்வாணமாக பாழ்கிணற்றில் போட்டனர்.*

*உடனே ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் விரைந்து வந்து கழுத்திலிருந்த ஆடையைப் பிரித்தெடுத்து நபி யூஸுஃப் நபியவர்களுக்கு அணிவித்தார்கள்.*

*பறக்கத்தான இவ்வாடையை பாதுகாத்து வைத்திருந்து மீண்டும் நபி ய ஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் ஒப்படைத்து கண்ணில் போடுமாறு நபி யூசூப் அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்.*

*ஆதாரம் தப்ஸீர் றூஹுல் பயான், அவாரிபுல் மஆரிப்.*

*இதனை அல்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.*

اذهبوا.بقميصي.هذا.فالقوه.علي.وجه ابي.ياءتي.بصيرا

*இந்த என்னுடைய சட்டையை நீங்கள் கொண்டு போய் என்னுடைய தந்தையுடைய முகத்தின் மீது அதனைப்போடுங்கள், பார்வையுள்ளவராக அவர் ஆகிவிடுவார். _ 12 : 93*

*நபி அய்யூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப்பற்றி திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.*

اركض برجلك هذا مغتسل بارد وشراب

*உம்முடைய காலால் (பூமியில்) அடியும் (என்று கூறினோம். அவ்வாறு அவர் அடித்தபோது ஓர் ஊற்று பொங்கியது, இது குளிர்ந்த குளிக்கும் நீராகும் இன்னும் குடிப்பதற்குமாகும்.(என்று கூறினோம் -- 38 - 42*

*அதாவது அய்யூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலடியிலிருந்து பொங்கிய நீர் அவர்களின் அகபுற நோய்களைச் சுகப்படுத்தியது.*

*நபி ஈஸா அவர்களைப் பற்றித்திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.*

وابراء الاكمه والابرص واحي الموتي باذن الله.

*இன்னும் பிறவிக்குருடரையும். வெண்குஷ்டர்களையும் நான் குணப்படுத்துவேன், அல்லாஹ்வின் அனுமதி கொண்டு இறந்தவர்களையும் உயிர்பிப்பேன் -- 3 - 49*

*நோய்களைச் சுகப்படுத்துவதும், மரணித்தவர்களை உயிர்பிக்கச் செய்வதும் அல்லாஹ்வின் வேலையாகும், ஆனால் அல்லாஹ்வின் அனுமதியுடன் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் சுகம் வழங்கியுள்ளார்கள், மரணித்தவர்களை உயிர்பித்துள்ளார்கள்,*

*நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வாழ்வில் நடந்த ஒரு நிகழ்வை திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.*

واذقال ابراهيم رب ارني كيف تحي الموتيقال اولم تو ءمن قال بلي ولكن ليطمءن قلبي قال وخذ اربعة من الطير فصر هن اليك ثم اجعل علي كل جبل منهن جزءا ثم اد عهن ياء تينك سعياواعلم ان الله عزيز حكيم.

*மேலும் இப்றாஹீம் – என்னுடைய றப்பே! இறந்தவர்களை எவ்வாறு நீர் உயிர்பிப்பாய்? என்பதை நீ காண்பிப்பாயாக,! என்று கூறியபோது. (இறந்தோரை நான் உயிர்பிப்பேன் என்பதை) நீர் நம்பவில்லையா? என்று (அல்லாஹ்) கேட்டான். (அதற்கு) அவர் , மெய்(யாக நான் நம்புகின்றேன்,) என்று கூறினார்,அவ்வாறாயின் பறவைகளிலிருந்து நான் கைப்பிடித்து அவற்றை உம்மிடம் வைத்துப்பழக்கி (பின்னர் , அவற்றைஅறுத்து ) பிறகு ஒவ்வொருமலையின் மீதும்அவற்றிலிருந்து ஒவ்வொருபாகத்தை வைப்பீராக! பிறகு அவற்றை அழைப்பீராக! அவை உம்மிடம் விரைவாக(ப்பறந்து)வரும் நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன் ஞானமுள்ளவன். என்பதை அறிந்துகொள்வீராக! என்று கூறினார்கள். _2 : 260*

நோயைச்சுகப்படுத்துதல் இறந்தவர்களை உயிர்பித்தல் இலாஹூவின் இன்றியமையாத பண்பாக இருக்குமாயின், நபி ஈஸா நபி அய்யூப், நபி இப்றாஹீம் அலைஹிமுஸ்ஸலாம் உள்ளிட்டோரை திருக்குர்ஆனின் சாட்சியத்தின்படி - இலாஹ், என்று ஏற்கவேண்டிவரும். நஊதுபில்லாஹிமின்ஹா…

**குழந்தைவரம் வழங்கல்**

*மர்யம் ரழியல்லாஹூஅன்ஹா குளிப்பதற்காக தனது மேலாடையைக்களட்டிய போது ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் முழுமனித உருவில் அவர்கள் முன்தோன்றினார்கள். இவர்களைக் கண்ட மர்யம் நாச்சியார் திகிலடைந்தார்கள். இதை உணர்ந்த ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அச்சப்பட வேண்டாம் நான் உமதுஇரட்சகனின் திருத்தூதர் என்று ஆறுதல் கூறி அவர்களை ஆனந்த மடையச்செய்தார்கள்.*

*இதனைத் திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது*

قال.انما.انا.رسول.ربك..لاهب.لك .غلاما.زكيا....١٩-١٩

*(அதற்கு)."நிச்சயமாக நானோ பரிசுத்தமான ஓர் ஆண் குழந்தையை உமக்கு நான் நன்கொடையாக அளிப்பதற்காக (வந்துள்ள) உமது றப்பின் தூதர்தான்" என்றுஅவர் கூறினார் 19-19*

*குழந்தை வரம் வழங்குவது அல்லாஹ்வின் செயல் என்பதை திருக்குர்ஆன் பின்வரும் திருவசனத்தில் தெளிவாகக் குறிப்பிடுகின்றது.*

يهب.لمن.يشاء.اناثا.ويهب.لمن.يشاء ذكورا...۴--۴۹

*தான் நாடியவர்களுக்கு பெண்குழந்தைகளை அளிக்கின்றான். இன்னும் தான் நாடியவர்களுக்கு ஆண் குழந்தைகளை அன்பளிக்கின்றான். 42 : 49*

*குழந்தை வரத்தை றப்பு வழங்குவதாக ஓர் இடத்திலும், ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் குழந்தையை நன்கொடையாக தான் வழங்குவதாக மற்றுமொரு இடத்திலும் திருக்குஆன் கூறுகின்றது.*

*"நன்கொடை" என்ற பதத்தை றப்புத்தஆலாவும், ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் கூறுகின்றனர். இதனால் , அல்லாஹுத்தஆலா ஜிப்ரயீலாகவோ, ஜிப்ரயீல் அல்லாஹ்வாகவோ ஆகவில்லை.*

*குழந்தைவரம் வழங்குவது இலாஹ்வுடைய உலூஹிய்யத்தின் தனிப்பண்பாக இருக்குமாயின், ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும், "இலாஹ்" என்று ஏற்கவேண்டும் நஊதுபில்லாஹ்...*

اله.رسول...نبي..ايمان

*தூரத்தில் உள்ளவற்றைக் கேட்பதும் பார்ப்பதும்*

*சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் தங்களின் படைபரிபாலனத்துடன் ஒருவழியால் சென்று கொண்டிருக்கும்போது, எறும்புகள் அதிகமாக வாழுகின்ற ஒருபள்ளத்தாக்கைத் தாண்டிச் செல்லவேண்டியேற்பட்டது. அப்போது அப்பகுதிகளில் வாழ்ந்ததாய் எறும்பு தன் கூட்டத்தைப்பார்த்து.*

*" நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களும், அவர்களின் படைகளும் இதன் வழியாக வருகின்றார்கள் உங்களை அவர்கள் பார்க்காமலே உங்களை மிதித்துவிடுவார்கள். அதனால், நீங்கள் அழிந்துவிடுவீர்கள். ஆகவே , முன்கூட்டியே வழிவிலகி தூரச்சென்றுவிடுங்கள் – என்று கட்டளையிட்டது.*

*தாய் எறும்பின் கட்டளையை மூன்று மைல்களுக்கப்பால் வந்துகொண்டிருந்த நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் செவியேற்று முறுவலித்தார்கள்.*

இதனைத் திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.

حتي اذااتو علي واد النمل قالت نملة يا ايها النمل ادخلوا مسكنكم لا يحطمنكم سليمن وجنوده وهم لا
يشعرون فتبسم ضاحكا من قولها

இறுதியில் எறும்புகளின் ஒருபள்ளத்தாக்கின் அருகில் அப்படைகள் வந்தபொழுது (தலைமைவகிக்கும்) ஓர்எறும்பு , எறும்புகளே! நீங்கள் உங்களுடைய வீடுகளுக்குள் புகுந்து கொள்ளுங்கள் சுலைமானும் அவருடையபடையினரும் தாம் அறியாமலேயே உங்களைத்திண்ணமாக மிதித்துவிட வேண்டாம்." என்று (மற்ற எறும்புகளிடம்) கூறியபோது அதனுடைய சொல்லினால் சிரித்தவராக அவர் புன்னகை செய்தார். 27 : 18/19

நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் எறும்புகளின் சப்தத்தை மூன்று மைல்களுக்கப்பால் கேட்டார்கள் என்று முபஸ்ஸிறுகள் எழுதியுள்ளனர். எறும்பின் சப்தத்தை நவீன கண்டுபிடிப்பாலும் செவியேற்க முடியாத மிகமிக மெல்லிய சப்தத்தை நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாம் மூன்று மைல்களுக்கப்பால் கேட்டார்கள். அச்சிற்றெறும்பைப்பார்த்தார்கள். எனின்,

நபியவர்களின் கேள்வித்திறனையும், பார்வையின் கூர்மையையும் என்வென்று கூறுவது! நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் சுலைஹா அம்மையாரின் அரண்மனையில் வசித்துவந்தார்கள். சுலைஹாவின் கணவர் அஸீஸ் மன்னர் ஆண்மையற்றவராக இருந்தார், அதனால் கணவரிடமிருந்து இன்பம் சுகிக்காமல் தவித்தார்கள்,

நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் தனது அரண்மனையில் அடிமையாக அதே நேரத்தில் முழுச்சுதந்திரத்துடன் வசித்துவந்தார்கள். அற்புதமான பேரழகராக இருந்த நபியவர்கள் மீது சுலைஹா அம்மையார் காதல் கொண்டார்கள்.

ஒரு தினம் யூசுப் நபி மீது சுலைஹா அம்மையார் வைத்திருந்த காதல் கட்டு மீறிவிட்டது. சுலைஹா தன் நிலையை இழந்துவிட்டார்கள். இந்தக்கட்டத்தில் யூசுப் நபியவர்களை தனது படுக்கையறைக்கு அழைத்துச்சென்றார்கள். படுக்கை அறைக்கு முன்னால் ஏழு வாசல்கள் உண்டு. அவையனைத்தையும் சுலைஹா தாழிட்டார் பின்னர், தனது விருப்பத்தை நிறைவேற்றுமாறு நபியவர்களைக்கெஞ்சினார்.

அதற்கு யூசுப் நபி மறுத்துவிட்டார்கள். நல்ல நிலையில் தன்னைப்பராமரித்து வருகின்ற தனது எஜமானக்குச் செய்யும் துரோக மிது என்று கூறிவிட்டு வெளியே ஓடிவந்து வந்துவிட்டார்கள், சுலைஹா அம்மையாருக்கும் நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குமிடையில் நடந்த இந்த விவகாரம் தாழிடப்பட்ட ஏழு வாசல்களுக்கப்பால் நடந்த பரம இரகசியமாகும், இப்பரம இரகசியத்தை எகிப்திலிருந்து வெகுதூரத்திலிருக்கும் " கன்ஆன்" என்ற இடத்திலிருந்த நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் உன்னிப்பாக பார்த்துக்கொண்டிருந்தது மன்றி உடன் விரைந்து வந்து மகனைக்காப்பாற்றினார்கள்.

இதனைத்திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது

ولقد همت به وهم بها لو لا ان راءبرهان ربه كذالك لنصرف عنه السوء والفحشاء انه من عبادنا المخلصين

ஆனால் அவரை (அடைய) அவள் விரும்பினாள். தம் றப்பின் அத்தாட்சியை காணாதிருந்தால், அவரும் அவளை விரும்பியிருப்பார் இவ்வாறு அவரை விட்டும் தீமையையும், மானக்கேடானவற்றையும் நாம் தடுப்பதற்காக(ச் செய்தோம்) நிச்சயமாக அவர் நம்முடைய தூய்மையான அடியார்களில் (ஒருவர்.) ஆவார். 12;24.

(அல்லாஹ்வின் அத்தாட்சி என்பது யஃகூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களையே குறிக்கும், இவர்கள் நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் முன் தோன்றி நெஞ்சில் அடித்தார்கள். அதனால் அவர்

*மனதிலிருந்த" இச்சை" விரல் நுனி வழியாக விலகிச்சென்றது. என்று ஹளரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள், (ஆதாரம் : தப்ஸீர்ஸாவி)*

*மேற்கண்ட திரு வசனத்தில் "அத்தாட்சியைக் கண்டார் " என்று குறிப்பிடப்பட்டதிலிருந்து இது கேட்கும் அத்தாட்சியல்ல. மாறாக பார்க்கும் அத்தாட்சியாகும், என்பது தெளிவாகின்றது.*

*திருக்குர்ஆனில் நபிகள் நாயகத்தையும் ."புர்ஹான்" அத்தாட்சி என்று கூறபட் டுள்ளது.*

يا.ايها.الناس.قد.جاءكم برهان.من.ربكم.

*மனிதர்களே! உங்களுடைய றப்பிடமிருந்து உங்களுக்கு (உறுதியான) அத்தாட்சி திட்டமாக வந்து விட்டது. 4 - 175*

*நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் மிகத் தூரத்திலிருந்து மூடப்பட்ட அறைக்குள் நடந்த பரம இரகசியமானதை எப்படிப் பார்த்தார்கள். என்பதைச் சிந்தனை செய்து பாருங்கள்! மேலும், திருக்குர்ஆன் கூறுகின்றது.*

ولمافصلت.العير.قال.ابوهم..اني.لاجد ريح.يوسف.

*(அவர்களுடைய) ஒட்டகக் கூட்டம் (எகிப்தை விட்டுப்) பிரிந்த போது , அவர்களுடைய தந்தை, (தம் அருகிலிருந்தவர்களிம்) "நிச்சயமாக நான் யூசுபுடைய வாடையை நுகர்கிறேன் என்று கூறினார் -12:94*

*நபி யூசூப் அலைஹிஸ்ஸலாம் ஆபிரிக்காக் கண்டத்திலிருக்கின்றார்கள் நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் ஷாம்பிரதேசத்திலிருக்கின்ற _ கன் ஆன்- என்ற கிராமத்திலிருக்கின்றார்கள் வெகு தூரத் திலிருந்து கொண்டு யூசூப் நபியின் அங்கியின் வாடையை நுகர்ந்திருக்கின்றார்கள்,*

*தூரத்திலிருப்பதைக் கேட்பதும், பார்ப்பதும், நுகர்வதும்*

*"இலாஹுவின்" தனிப் பெரும் பண்பு என்றிருந்தால் ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் ஹளறத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் ஆகிய இருவரையும் - "இலாஹ்" என்று ஏற்கவேண்டி வரும். ந ஊது பில்லாஹிமின்ஹா .*

***ஐயத்திற்குப் பதில்***

*யாராவது ஒருவரை அல்லாஹ்வுக்குச் சமப்படுத்து வதைத்தான் "ஷிர்க் " எனப்படும்.ஷிர்க்கின் வேர் இதில் தான் உண்டு.*

*அல்லஹுத்தஆலா கூறுகின்றான்.*

ثم الذين كفروا بربهم يعدلون

*(இதன்) பிறகும் காபிர்கள் தங்களுடைய றப்புக் கு(அவ னல்லாத தெய்வங்களைச்) சமப்படுத்துகின்றனர். 6 - 01*

*மறுமையில் முஷ்றிக்குகள் தங்களின் தெய்வங்களைப்பார்த்து , நாங்கள் மிகப் பெரிய வழிகேட்டிலிருப்பதாகக் கூறுவர்.*

تاالله انا كنا لفي ضلال مبين اذ نسويكم برب العالمين.

*அல்லாஹ் மீது ஆணையாக நிச்சயமாக 'நாங்கள் பகிரங்கமான. வழி கேட்டில் இருந்தோம் '- 26 : 97/98*

*மேற்கண்ட திரு வசனங்களிலிருந்து "யாராவது ஓர் அடியானை றப்புக்குச் சமப்படுத்துவது தான் ஷிர்க்கின் அடிப்படை " என்பது தெளிவாகின்றது.*

*ஒருவரை "றப்புக் கு "சமப்பபடுத்துவதில் இரண்டு முறைகள் உண்டு*

*1 - ஓர் அடியானை றப்புக்குச்சமனாகும் விதத்தில் உயர்த்திப் பார்ப்பது , அது அல்லாஹ்வைப் போன்று சுயமாகப் படைத்தல் மறைவானவற்றை அறிதல் , இரட்சித்தல் போன்ற பண்பு இருப்பதாக நம்புதல்,*

*2 - றப்புத் தஆலாவின் தகுதியை நீக்கிவிட்டு , அவனை அடியானின் வரிசையில் நிறுத்துவது - அதாவது.சில விடயங்களில் அடியான் அல்லாஹ்வில் தேவையுள்ளவனாக இருக்கின்றான். வேறு சில விடயங்களில் றப்புத் தஆலா அடியானில் தேவையுள்ளவனாக இருக்கின்றான் என்று நம்புவது.*

*மேற்கண்ட இரு விதத்திலும் அடியானை அல்லாஹ்வுக்குச் சமப்படுத்தப்படுகின்றன இது " ஷிர்க் " ஆகும் .*

*அறபு நாட்டு முஷ்ரிக்குகள் இவ்விரண்டு விதமான ஷிர்க்கிலும் மாட்டுப் பட்டிருந்தனர்.*

*சில காபிர்கள் மலக்குகளை அல்லாஹ்வின் பெண்மக்கள் என்றும் , மற்றும் சிலர் தங்களின் சிலைகளை அல்லாஹ்வின் ஆண்மக்கள் என்றும் நம்பினர் , தந்தையும், மகனும் ஒரு வருக்கொருவர் தேவையுடையவர்களாக இருப்பது வெளிப்படையானது தான்,*

*மனிதன் என்ற இனத்திலும் , தந்தை, மகன் என்ற விதத்திலும் ஒருவருக்கொருவர் சமமாகும். இவர்கள் இதன் காரணமாகவே முஷ்றிக்கானார்கள். இதை மறுத்து திருக்குர்ஆனில் பல்வேறு திருவசனங்கள் காணப்படுகின்றன.*

*அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்*

لم يلد ولم يولد ولم يكن له كفوا احد.

*அவன் (எவரையும் ) பெறவுமில்லை. அவன் (எவராலும்) பெறப்படவுமில்லை .இன்னும் அவனுக்கு ஒப்பாக எவருமில்லை. 112 -3 - 4*

*மேலும்,*

وقل الحمد لله الذى لم يتخذ ولدا

*இன் னும் (நபியே!) நீர் கூறுவீராக! அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் உரியது , அவன் எத்தகையோன் என்றால். எந்த சந்ததியையும் (தனக்கு) அவன் ஆக்கிக்கொள்ளவில்லை, _ 17:11*

*மேலும்,*

وجعلوا بينه وبين الجنة نسبا

*(அன்றியும் ) அவனுக்கும் , ஜின்களுக்கு மிடையே (வம்சாவளியான) ஒரு தொடர்பை அவர்கள் உண்டாக்கினார்கள். 37: 158*

*அறபு நாட் டு முஷ்ரிக் கீன் களிடம் இப்படியான ஒரு கொள்கை பரவலாகக்காணப்பட்டது. அதாவது, நாங்கள் வணங்கும் சிலைகள் பிழையான கடவுள்கள் .அல்லாஹ்வின் அடிமைகள். ஆயினும், அல்லாஹுத்த ஆலா அவற்றின் பால்தேவையுள்ளவனாக உள்ளான்.*

*றப் புத்தஆலா உலகைப் படைத்த பின்களைப் படைந்து இயலாதவனாகி விட்டான். இப்போது உ லகத்தை நிருவகிக்க அவனால் முடியாது.. எங்களின் கடவுள்கள் தான் உலகத்தை நடத்திக் கொண்டிருக்கின்றன.*

*இதில் அடியானை அல்லாவுக்குச் சமப்படுத்தப்படுகின்றது , . அல்லாஹ்வுக்கு அடியானில் தேவை ஏற்படுத்தப்படுகின்றது. இவ்விதமான அதீதா "ஷிர்க்" காகும்.*

*இதை மறுக்கும் திருவசனங்கள் திருக்குர்ஆனில் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன.*

*அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.*

ولقد خلقنا السموات والأرض وما بينهما فى ستة أيام وما مسنا من لغوب

*"வானங்களையும், பூமியையும் அவ்விரண்டிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் திட்டமாக நாம் படைத்தோம். (அதனால்) எவ்விதச் சோர்வும் நமக்கு ஏற்படவில்லை' 50 : 38*

*மேலும்,*

ولم يكن له ولي من الذل

*இன்னும் இயலாமையினால் எந்த உதவியாளனும் அவனுக்கு இருக்கவில்லை, 17-111*

*இவர்களின் இந்த அகீதா ஷிர்க் ஆகும் - சில அறபு நாட்டு காபிர்கள் உலகத்திற்குத் தனித்துவமான இரு கடவுள்கள் இருப்பதாக நம்பினர் .நன்மையைப் படைப்பவன் ஒருவன் இக்கடவுளின் பெயர் "யஸ் தான் " தீமையை படைப்புக்கடவுளின் பெயர் "அகர்மன் " என்று இவர்கள் சில அடியார்களை இறைவனின் உச்சத்திற்கு உயற்த்தி விட்டனர்.*

*அல் ஹம்துலில்லாஹ் !*

*எந்த ஒரு முஸ்லிமும் இக்கேடுகெட்ட அகீதாவைக் கொண்டிருக்கவில்லை, சில நல்லடியார்களுக்கு மறைவான அறிவை அல்லாஹ் வழங்கியிருப்பதாக நம்புகின்றனர். வேறு சில நல்லடியார்களுக்கு அல்லாஹ் வழங்கிய சக்தியைக்கொண்டு மக்களின் கஷ்டங்களை நீக்குகின்றனர். தேவைகளை நிறைவேற்றுகின்றனர். என்று நம்புகின்றனர் .இது ஒரு போதும் ஷிர்க்காகவோ , குப்றாகவோ ஆகாது.*

*முஸ்லிம்கள் வைத்திருக்கின்ற இது போன்ற அகீதாவினால் அறபு நாட்டு முஷ்றிக்கீன்கள் காபிராகிவிடவில்லை .திருக் குர்ஆனின் வெளிச்சத்தில் நாம் காட்டிய விதத்தில் தான் காபிரானார்கள். என் பதைக் கவனத்தில் கொள்ளவும்.*

*அல்லாஹ் கொடுத்த சக்தியைக் கொண்டு நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் மக்களின் தேவைகளை நிறைவேற்றுகின்றார்கள் . இரட்சிக்கின்றார்கள் என்றெல்லாம் சஹாபாக்கள் நம்பினார்கள்.*

*அவர்களுகளில் ஏதும் தவறுகள் ஏற்பட்டால் , நேரே றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லவர்களிடம் வந்து*

طهرني يا سول الله

*அல்லாஹ்வின் திருத்தூதரே ! என்னைச் சுத்தப்படுத்துங்கள் என்று கூறுவார்கள்.*

*அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.*

هو الذي بعث في الامين رسولا منهم يتلوا عليهم أيته ويزكيهم ويعلمهم الكتب والحكمة وان كانوا من قبل لفي ضلال مبين

*அவன் எத்தகையவன் என்றால் , எழுத்தறிவில்லா மக்களில் அவர்களிலிருந்தே ஒரு றசூலை அனுப்பினான், அவர்களுக்கு அவனுடைய வசனங்களை அவர் ஓதிக் காண்பித்து அவர்களைப் பரிசுத்தமாக்கி வேதத்தையும் , ஞானத்தையும் அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பார். நிச்சயமாக அவர்கள் இதற்கு முன் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருந்தனர், _ 62 : 2*

*மேலும்.*

خذ من اموالهم صدقة تطرهم وتزكيهم بها وصل عليهم ان صلوتك سكن لهم والله سميع عليم!

*(நபி யே ! ) அவர்களுடைய பொருட்களிலிருந்து (பாவ பரிகாரத்திற்காக ஒரு பகுதியை) தருமமாக நீர் எடுத்துக் கொண்டு அதன் மூலம் அவர்களை(ப் பாவங்களை விட்டும்) நீர் தூய்மையாக்கி வைத்து, அவர்களுக்குத் துஆச் செய்வீராக ! நிச்சயமாக உம்முடைய துஆ அவர்களுக்கு நிம்மதியளிப்பதாகும். அல்லாஹ்(யாவற்றையும்) செவியேற்பவன். முற்றும் அறிந்தவன். 9. 103*

*திருக்குர்ஆன் , ஹதீஸ் நோன்பு தொழுகை உள்ளிட்டவையில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களின் திருப்பார்வை படா விட்டால் அவற்றில் எதுவும் எம்மைப் பரிசுத்தப்படுத்தாது என்பதை மேற்கண்ட திருவசனத்தின் மூலம் அறிய முடிகின்றது.*

*திருக்குர்ஆனும், ஹதீதும், நீரும், சவர்க்காரம் போன்றுள்ளது. பெருமானாரின் பார்வையும், அன்னாரின் உதவியும் பரிசுத்தம் செய்யும் ஆத்மீகக் கரமாகும். கையில்லாமல் சவர்க்காரத்தாலும் , நீராலும் ஒரு போதும் சுத்தப்படுத்த முடியாது.*

*பார்வையற்ற பலர் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களால் பார்வை பெற்றனர். வலிப்பு நோயுள்ள எத்தனையோ நோயாளிகள் நபியவர்களால் சுகம் பெற்றனர்.*

*மிருகங்கள் பெருமானாரிடம் அபயம் தேடின , மரங்கள் கற்கள்,அன்னாரிடம் பாதுகாப்புப் பெற்றன,*

*நாயகத் தோழர் ஹளறத் "றபி ஆ " றழியல்லாஹு அன்ஹு நபியவர்களிடமிருந்து சொர்க்கத்தைக் கேட்டுப் பெற்றுக் கொண்டார். அதாவது "அல்லாஹ்வின் திருத்தூதரே ! சொர்க்கத்தில் உங்களுடன் கூடவே இருப்பதை உங்களிடம் கேட்கின்றேன் " என்று கேட்டதாக ஸஹி முஸ்லிமில் பதிவாகியுள்ளது.*

*அதாவது, ஈமான், அமல், இறுதி மூச்சு நல்லதாக (ஈமானுடன்) முடிதல் ( ஹூஸ்னுல் காதிமா) கப்றின் சோதனையில் வெற்றி, மஹ்ஷர் பெருவெளியில் சந்திக்கின்ற அமளியிலிருந்து விமோசனம் பெறுதல், சிறாத்துல் முஸ்தகீம் பாலத்தைக் கடத்தல் , சொர்க்கத்தில் நுழைதல் , நபிகள் கோமான் முஸ்தபா மா நபியின் நெருக்கம் உள்ளிட்டயாவற்றையும் ஹளறத் "ற பீ ஆ " றழியல்லாஹூ அன்ஹூ நபியவர்களிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டார்கள்,*

*இவற்றையெல்லாம் வழங்குவது அல்லாஹ்வின் வேலை என்னால் முடியாது என்று திருநபியவர்கள். கூறவில்லை. இது தவிர , வேறு ஏதும் உண்டா ? என்று கேட்க, அதுதான் எனது வேண்டுதல் என்று கூறினார் ஹளறத் றபீ ஆ றழியல்லாஹூ அன்ஹூ*

*நபியவர்கள் அல்லாஹ் வழங்கிய ஆற்றலைக் கொண்டு நாட்டங்களை நிறைவேற்றுகின்றார்கள். - உதவிகள். இரட்சிப்புச் செய்கின்றார்கள்*

*யாருக்காவது மறைவான அறிவை அல்லாஹுத்தஆலா கொடுத்துள்ளான் என்றோர் , கஷ்டங்களை நீக்குவார்கள். உதவி செய்வார்கள் என்றோ நம்புவது "ஷிர்க் " என்றால் , சங்கையான அனைத்து சஹாபாக்களும் " முஷ்ரிக் "காக ஆகிவிடுவார்கள். அல்லாஹ் காப்பாற்ற வேண்டும்.*

*சங்கையான நபிமார்களுக்கு மறைவான அறிவுண்டு. கஷ்டங்களை அவர்கள் அகற்றுவார்கள், என்பதெல்லாம் சாதாரணமா எல்லோரும் அறிந்த வெளிப்படையான விஷயங்களாகும்.*

*இதை தற்காலத்தில் வாழ்கின்ற காபிர்கள் கூட நிராகரிக்க மாட்டார்கள். அப்படியிருக்க இவர்கள் இதனை நிராகரிப்பது தான் ஆச்சரியமாக இருக்கின்றது.*

*திருக்குர்ஆன் கூறுகின்றது பிர்அவ்ன் மீதும், பிர் அவ்னின் கூட்டத்தார் மீதும் அல்லாஹ்வின் தண்டனை இறங்கும் வேளைகளில் , அவர்கள் அனைவரும் கலீ முள்ளாஹ் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் திருச்சமுகம் வந்து (இவ்வாறு)கூறுவார்கள்.*

ولما وقع عليهم الرجز قالوا يا موسى ادع لنا ربك بما عهد عندك لئن كشفت عنا الرجز لنئمنن لك ولنرسلن معك بني اسرائيل

*அவர்களின் தண்டனை (யும் , வேதனையும்) ஏற்பட்டபோதெல்லாம் " மூஸாவே ! உம்முடைய றப்பிடம் உம்மிடம் அவன் வாக்களித்திருப்பதன் காரணத்தால் , எங்களுக்காக நீர் பிரார்த்திப் பீராக ! இந்த அதா பை எங்களை விட்டும் நீர் நீக்காவிட்டால் , உம்மைத் திண்ணமாக ஈமான் கொண்டு இஸ்றாயீலின் மக்களை உம்முடன் திண்ணமாக நாங்கள் அனுப்பி வைக்கின்றோம் " என்றும் கூறினர். 7 ;135*

*இவர்கள் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் உதவிதேடி இரட்சிப்புத் தேடியதை "ஷிர்க் " என்று கலீ முள்ளாகூற வில்லை. அல்லாஹுத்தஆலாவும் கூறவில்லை , மாறாக கலீமுள்ளாஹ் அவர்கள் துஆக் கேட்டார்கள் அதனை ஏற்று அல்லாஹுத்தஆலாவும் அதாபை நீக்கினான் - பின்னர் அவர்கள் வாக்கை மீறினர் மற்றுமொரு தண்டனை வந்தது.*

*அல்லா ஹூ தஆலா கூறுகின்றான்*

فلما كشفنا عنهم الرجز الى اجل هم بالغوه اذا هم ينكثون

*பிறகு .அவர்களை விட்டும் (அந்த) அதாபை (குறிப்பிட்ட) ஒரு கால அளவுக்கு நாம் நீக்கிய போது , அவர்கள் அ (ந்த காலத்)தை அடைந்ததும் , உடனே அவர்கள் (தாம் அளித்த வாக்குறுதியை) முறிப்பவர்களா(வே) இருந்தனர் . 7_135*

*இவர்களின் இச்செயல் ஷிர்க்காக இருந்திருப்பின் ,தண்டனை அதிகரித்திருக்க வேண்டும். நீக்கப்பட்டிருக்கக் கூடாது.*

*இக்காலத்தில் வாழ்கின்ற சிலரின் வார்த்தைகளை பொதுமக்களாலும் புரிந்துகொள்ள முடியாதிருப்பது கவலையளிக்கின்றது.*

***றஸூல் என்றால் யார் ?***

*"கலி மாத் தைய்யிபா " இரு பகுதிகளைக் கொண்டுள்ளன.*
*1 - லாஇலாஹ இல்லல்லாஹ்*
*2 -முஹம்மதுர் றஸூலுள்ளாஹ் (ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமம்)*

*உலூஹிய்யத்தின் மூலச்சசக்கரம் இருக்கும் மெய்ப்பொருளைத் தான் "இலாஹ் " என்று கூறப்படும். என்ற தெளிவான விளக்கம் கடந்த பகுதியில் கூறப்பட்டுள்ளது*

*இத்தொடரில் "ற ஸூல்" என்றால் யார் ? றஸூலுக்கான பொருள் என்ன ? றஸூலுக்கான மூலச்சக்கரம் இருக்கும் பொருள் யாது? என்பன ஆராயப்படவுள்ளன*

*ரிசாலத் என்றால் அனுப்புதல் என்பது இதன் பொருள் "பஃதத் " என்ற சொல்லுக்கும் , இது தான் பொருள். "பஃதத் " என்ற சொல்லுக்கும் , " றிசாலத் " என்ற சொல்லுக்கும் சிறு வேற்றுமை காணப்படுகின்றது.*

*பொதுவாக அனுப்புவதற்கு "பஃதத் " என்று கூறப்படும் . ஏதாவதொன்றைக் கொடுத்தனுப்புவதற்கும், ஏதாவ தொன்றைப் பெறுவதற்கும் யாராவது ஒருவரைப் பாதுகாப்பதற்கும் " றிசாலத் " என்ற சொல் பயன்படுத்தப்படும். இதனால் , " றிசாலத் " என்ற சொல் "பஃதத் " என்ற சொல்லின் கருத்தை விட விசாலமானது. அதனால் பொதுமக்கள் இச்சொல்லைப் பயன்படுத்துவதில்லை,*

*"ற சூல் " என்ற சொல்லின் சுருக்கமான பொருள் "தூதைச் சேர்த்து வைப்பவர் , அருளைச் சேர்த்துவைப்பவர் " என்பதாகும். அடுத்து றசூல் என்பவர் இருவகைப்படுவர்.*

*1 -சுதந்திரமில்லாத றசூல்*
*2- சுதந்திர முள்ள றசூல்*

*சுதந்த ரமில்லாத றசூல் என்பவர்கள் சில மலக்குகளாகும். இவர்களின் நாயகர் ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் ஆவார்கள். அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.*

الحمد لله فاطر السموات والأرض جاعل الملائكة رسلا اولي اجنحة مثني وثلث وربع
*வானங்களையும், பூமியையும் படைத்தவனும் இரண்டிரண்டாக மும்மூன்றாக , நன்நான்காக இறக்கைகள் உடையவர்களான மலக்குகளைத் தூதர்களாக்கியவனுமாகிய அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும், உரியன _ 35_ 1*

*சுதந்திரமுள்ள தூதர்கள் சங்கையான நபிமார்களாகும். இதனை ஒப்புவமை (தஷ் பீஹ்) இன்றி பின்வரும் உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்ளுங்கள்.*

*அரசரின் ஒரு கட்டளை அஞ்சல் மூலம் ஆளுனர் அல்லது பிரதம மந்திரிக்குப் போய்ச் சேருகின்றது. காரணம் நிருவாகம் சட்டத்தின்படி நடக்க வேண்டும் , என்பது தான் இதன் நோக்கம் , முத்திரையிடப்பட்ட இவ்வாணையை அஞ்சல் காறர் ஆளுனர், அல்லது பிரதமமந்திரியிடம் சேர்த்து வைக்கின்றார். பின்னர் நிருவாகிகளிடம் இதைச் சேர்த்து வைக்கின்றனர் சட்டம் நிருவாகிகள் மூலம் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.*

*சட்டத்தை மீறுவோர் தண்டிக்கப்படுகின்றனர். சட்டத்தை மதித்து நடைமுறைப்படுத்துவர்கள் பாராட்டப்பட்டு பரிசில்கள் வழங்கி கவுரவிக்கப்படுகின்றனர்.*

*அஞ்சல் காறரும், ஆளுனர் பிரதம மந்திரி ஆகியோர் தூதைச் சேர்த்து வைப்பவர் என்றாலும் இருவரின் நிலையிலும் வேறுபாடு உண்டு அஞ்சல் காறர் சுதந்திரமில்லாமல் தூதைச் சேர்த்து வைத்தார்.ஆளுனரும் அரச உயர் அதிகாரிகளும் சுதந்திரத்துடன் அவர்களுக் கீழ் உள்ளவர்களிடம் சேர்த்து வைத்துள்ளனர். இவர்களின் தகுதிகளில் வேறுபாடு காணப்படலாம்.*

*அஞ்சல் காறர் - ஊழியர் ஆவார் பிந்தியவர்கள் சட்டத்தை நடைமுறைப்படுத்துகின்ற பணிப்பாளர்கள்.*

*பணிப்பாளர் களுக்கு வழிபடுவதும் , கட்டுப்படுவதும் அரசருக்குக் கட்டுப்படுவதும் வழிப்படுவது போன்று கணிக்கப்படும்.*

*பணிப்பாளர்களின் கட்டளைகளை மீறுவது குற்றமாகவும் பயங்கரவாதமாகவும் கணிக்கப்பட்டு அவர்களை சிறையிலடைக்கவும் தூக்கிலிடவும் இவர்களுக்குச் சுதந்திரமளிக்கப்பட்டுள்ளது. இந்தச் சுதந்திரம் தபால் ஊழியருக்கு வழங்கப்படவில்லை, இவ்வாறே தகவல் கொண்டு வருபவர்க(ளான மலக்குக)ள் நபிமார்களின் ஊழியர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர். எவரும் மலக்குகளின் உம்மத்தாக இருப்பதில்லை. மலக்குகளின் சட்டம் எவர் மீதும் அமுலாவ தில்லை. இத்தூதர்களின் பெயர்கள் திருக்கலிமாவில் இடம் பெறுவதில்லை.*

*சங்கையான நபிமார்களை மனிதர்களின் தலைவர்களாக அல்லாஹ்வின் தரப்பிலிருந்து நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களின் முழுஅதிகாரமும் சுதந்திர முள்ள ஆட்சியாளர்களாக இருக்கின்றனர். இதனால் தான் மனித சமுதாயம் அவர்களின் உம்மத்தாக இருக்கின்றனர்,*

*இவர்களின் பெயர்கள் கலிமாவில் உச்சரிக்கப்படுகின்றன. அவர்களின் சட்டங்கள் அனைவரிலும் செல்லுபடியாகின்றது. இதன் மூலம் சுதந்திர முள்ள தூதருக்கும் சுதந்திரமில்லாத தூதருக்குமிடையிலுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளலாம்.*

*சங்கையான நபிமார்களும் சுதந்திரமில்லாத தூதர்களாக இருப்பார்களாயின் , ஹளரத் ஜிப்ரயீலின் தூதுக்கும். சங்கைக்குரிய முஹம்மது ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களுக்குமிடையில் என்ன வேறுபாடு ? கலி மாத்தைய்யிபாவில் எதற்காக முஹம்மது றஸூலுள்ளாஹ் என்று கூறுகின்றோம் , ஹளரத் ஜிப்ரயீலை ஜிப்ரயீல் றஸூலுள்ளாஹ் என்று ஏன் கூறுவதில்லை*

*ஹளரத் உமர் ரழியல்லாஹு அன்ஹூ அறிவிக்கின்றார்கள்*

ஒரு தினம் கோமான் முஹம்மது முஸ்தபா மாநபியின அவையில் நாங்கள் இருந்தோம். அப்போது ஒரு மனிதர் அங்கே வந்தார். அவர் தூய வெள்ளை நிற ஆடை அணிந்திருந்தார். அவர் தலைமுடி கறுப்பாக இருந்தது. அவர் ஒரு பிரயாணி போன்று காணப்படவில்லை. அங்கிருந்த எவருக்கும் .அவரைத் தெரியாது அதாவது அவர் மதினாவாசியல்ல அவர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களுக்கு முன் வந்து கால் மடித்து ஒழுக்கத்துடன் இருந்தார் , பெருமானாரிடம் ஐந்து கேள்விகள் கேட்டார்

*(1) ஈமான் என்றால் என்ன?*

*( 2 ) இஸ்லாம் என்றால் என்ன ?*

*(3) இஹ்சான் என்றால் என்ன?*

*(4) கியாமத் நாள் எப்போது வரும் ?*

*(5) கியாமத் நாளின் அடையாளம் எது ?*

றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் ஐந்து கேள்விகளுக்கும் பதில் கூறினார்கள். உண்மை தான் கூறினீர்கள் என்று கூறிவிட்டு சென்று விட்டார். பின்னர் வந்தவர் "ஜிப்ரயில் உங்களின் மார்க்கத்தை உங்களுக்குக்கற்றுத் தரவே இங்கு வந்தார் " என்று நபியவர்கள் கூறினார்கள்.

பாருங்கள் ! ஹளறத் ஜிப்ரியில் அலைஹிஸ்ஸலாம் ஸஹாபாக்களைப் பார்த்து "நான் ஜிப்ரயீல் பிரச்சினைகளுக்கான தீர்வுகளை என்னிடம் கற்றுக் கொள்ளுங்கள் " என்று கூறவில்லை மாறாக நபிகள் நாயகத்திடம் மாணவரின் அந்தஸ்தில் வந்து அத்தஹிய்யாத்தில் இருப்பது போன்று முழு ஒழுக்கத்துடன் அமர்ந்து கேள்விகள் கேட்டு அதன் பதிலை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹிவசல்லந்மவர்களின் திருவாயினால் மொழியச் செய்தது ஏன் ?

ஹளரத் ஜிப்ரியீலின் வார்த்தையைக் கேட்பதும் அதனை ஏற்றுச் செயல்படுவதும் மக்களுக்குக் கடமையில்லை. கால் மடித்து இருந்ததன் மூலம் நபியவர்களுக்கு முன்னால் இருக்க வேண்டிய ஒழுக்கத்தை முஸ்லிம்கருக்குக் கற்றுக் கொடுத்தார்கள். நானும் உங்களைப்போன்றே நபிகளாரின் சேவகனும் உம்மத்து மாவேன் என்பதை உறுதிப் படுத்திக்கொண்டார்கள்.

சுதந்திர முள்ள தூதருக்கும் சுதந்திரமில்லாத தூதருக்குமிடையிலுள்ள வேறுபாடு இதுதான். ஆயினும், இன்று சிலர் , நபிகள் நாதரை சுதந்திரமில்லாத தபாற் காறரைப் போன்று சித்தரிக்க முயலுகின்றனர். ந ஊது பில்லாஹ்...

ஓர் உருது கவிஞர் பாடுகின்றார்

ஜிப்ரயீல் மொழியாமல் முஸ்தபா நபி நவிலுவதில்லை. கர்த் தோன் உரைக்காமல் ஜிப்ரயீலும் பேசுவதில்லை

றிசாலத் ஜிப்ரயீலுக்கும் , றிசாலத் முஹம்மதிற்கும் இடையிலுள்ள வித்தியாசம்யாது ? நபியவர்களை ஏன் நாம் பின்பற்ற வேண்டும். ? சமுகம் அவர்களின் உம்மத்தாக ஏன் ஆனார்கள் ? என்பன நமது கவனத்திற்குரியவையாகும்.

*அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்*

ويزكيهم ويعلمهم الكتاب والحكمة

*அவர்களைப் பரிசுத்தமாக்கி அவர்களுக்கு வேதத்தையும் , ஞானத்தையும் கற்றுக்கொடுப்பார். 62 : 2*

خذ من اموالهم صدقة تطهرهم وتزكيهم بها وصل عليهم

*(நபியே ! ) அவர்களுடைய பொருட்களிலிருந்து (பாவப் பரிகாரத்திற்காக ஒரு பகுதியை) தருமமாக நீர் எடுத்துக் கொண்டு , அதன் மூலம் அவர்களை(ப் பாவங்களை விட்டும்) நீர் தூய்மையாக்கி வைத்து அவர்களை (யும் அவர்களின் உள்ளங்களையும் ) பரிசுத்தமாக்கிவைத்து அவர்களுக்கு துஆச் செய்வீராக ! 9_103*

ترجي من تشاء منهن وتئوي اليك من تشاء

*(நபியே ! உம்முடைய மனைவியரான ) அவர்களில் நீர் விரும்பியவரை (உம்மை விட்டும் ) ஒதுக்கி வைக்கலாம். நீர் விரும்பியவரை உம் பக்கம் சேர்த்துக்கொள்ளலாம் 33:51*

وما كان لموءمن ولا موءمنة اذا قضي الله ورسوله امرا ان يقول لهم الخيرة من امرهم

*இன்னும் அல்லாஹ்வும் ' அவனுடைய றசூலும் ஏதேனும் ஒரு காரியத்தை முடிவு செய்து விட்டால், முஃமினான எந்த ஆணுக்கும் , பெண்ணுக்கும் தம் காரியங்களில்(அத் தீர்ப்புக்கு மாறாக வேறெதையும்) தேர்ந்தெடுக்கும் உரிமையில்லை. 33-36*

فلا وربك لا يئومنون حتي يحكموك فيما شجر بينهم ثم لا يجدوا في انفسهم حرجا مما قضيت ويسلموا تسليما

*உம்முடைய றப் பின் மீது சத்தியமாக ! அவர்கள் தம்மிடையே பிணங்கிக் கொண்ட(விஷயத்)தில் உம்மை அவர்கள் நீதிபதியாக்கி , பிறகு நீர் தீர்ப்பளித்ததைப் பற்றித் தம்மனங்களில் எவ்வித அதிருப்தியையும் காணாமல் (உம்முடைய தீர்ப்பை ) முற்றிலும் அவர்கள் ஏற்றுக் கொள்ளாத வரை அவர்கள் ஈமான் கொண்டவர்களாக மாட்டார்கள். 4: 65*

*சுதந்திரமில்லாத தூதர் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக ஆகுவதில்லை. அவருக்கு அவர் சமுகத்தில் இவ்வளவு சுதந்திரம் கிடைப்பது மில்லை.*

***தூதரின் வருகை ஏன் அவசியம் ?***

*அல்லாஹுத்தஆலா நமது பிடரி நரம்பை விடவும் நமக்கு நெருக்கமாக இருந்த போதிலும் அல்லாஹ்வுக்கு நாம் தூரத்திலேயே இருக்கின்றோம். இடைவணை இல்லாமல் அவனிடமிருந்து அருளை உதவியைப் எம்மால் பெற முடியாது. நாம் இருளில் இருக்கின்றோம். அவன் ஒளியாகவும் , ஆற்றல் மிக்கவனாகவும் இருக்கின்றான். நாம் நிர்பந்தமானவர்கள் ,மட்டுப்படுத்தப்பட்டவர்கள், அவன் ஆற்றலுள்ளவன் , நாம் அவன் ஆற்றலுக்குட்பட்டவர்கள் , இதனால், இரட்சகனுக்கும், இரட்சிக்கப்பட்டவர்களுக்கும், வணங்குபவர்களுக்கும், வணக்கத்திற்குரியவர்களுக்கும், படைத்தவனுக்கும், படைப்புக்கும், அடிமைக்கும், அரசனுக்கும், தேவையுள்ளவனுக்கும், பரோபகாரிக்கும் இடையில் இறைவனிடமிருந்து பேரருளை - உதவியை பெற்றுத் தரக்கூடிய மிகப்பெரிய "இடை துணை " இருக்க வேண்டியது. மிக மிக அவசியமாகும்,*

*உடலுக்கும். இதயத்திற்கும் மத்தியில் நரம்புகள் , எலும்புகள் இருப்பது அவசியமாகும் , உடலின் வளர்ச்சிக்கு நன்மை பயக்கும் இருதியை நரம்புகள் எடுத்துச் செல் கின்றன. றூஹ் , இதயம், ஈரல் ஊடாக உடலைக் கவனித் கொள்கின்றன , நாம் நிர்பந்தமாக இருந்து கொண்டே இடைதுணையின்றி இறைவனிடமிருந்து அருளை எப்படிப்பெற முடியும் ? எமது முறைப்பாட்டை அவனிடம் எப்படி சேர்க்க முடியும் ?*

*இதனால், றப்புக்கும், நமக்குமிடையில் ஒரு "இடைதுணை " இருக்க வேண்டியது அவசியமாகும், இந்த இடைதுணைக்குப் பெயர்தான் "றஸூல் "இந்த ஊடக வழிக்குப் பெயர்தான் "றிஸாலத் "ஆகும்.*

*றப்பிடமிருந்து ஒன்றைப்பெற நாடுகின்ற அல்லது அவனிடம் ஒன்றைச் சேர்த்துவைக்கின்ற ஒவ்வொரு வருக்கும் றஸூலின் தேவை அவசியமாகும் , உலகத்தில் ஏற்படுகின்ற ஆபத்துக்களிலிருந்து தன்னைப் பாதுகாதுக் கொள்வதற்கு இருக்கின்ற ஒரே ஒரு மாமருந்து நபியின் முந்தானையைப் பிடித்துக் கொள்வதாகும்,*

*அல்லா ஹூத்தஆலா கூறுகின்றான்.*

واعتصموا بحبل الله جميعا ولاتفرقوا

*இன்னும் நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் (தீனாகிய) கயிற்றைக் கெட்டியாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிரிந்துவிடாதீர்கள், _ 3 : 103*

*இத்திரு வசனத்தின் விளக்கத்தை இவ்வாறு புரிந்து கொள்ளுங்கள். ஒரு கிணற்றில் நல்லதண்ணீரும், அடியில் சகதியும் காணப்படுகின்றன. தண்ணீர் கலக்கமடையாமல் வாளியை விட்டு பவ்வியமாக தண்ணீரை மேலே எடுக்கவே விரும்புவோம். அடியிற்கிடக்கும் சகதியில் வாளிபடக் கூடாது என்பதற்காகவே வாளியைப் பயன்படுத்துகின்றோம் கயிற் றின் ஒரு முனைநமது கையிலும், மறுமுனையை வாளியிலும் கட்டி விடுகின்றோம்.*

*கயிறு தடிப்பாக முறடாக இருந்து வாளியைக் கட்டமுடியாவிட்டால் மெல்வியகயிற்றைப் பயன்படுத்துகின்றோம்.இவ்வாறுதான் வாளி கிணத்திற்குள் சென்றுநீரை நல்ல முறையில்கொண்டு வருகின்றது, இதனால் வாளி சகதியில் மாட்டுவது மில்லை, அங்கே தங்கி விடுவது மில்லை.*

*உலகம் ஓர் ஆழமான கிணறு அதில் அதில் , சீரான அகீதாக்களும் , நல்லமல்கள் என்ற மதுரமான நீரும் உண்டு. இந்த நீரினால் தான் மறுமையின் வயல் பசுமையடைகின்றது , .அது போல் அங்கே கெட்ட அகீதா என்ற சேறும் உண்டு , நாம் வாளியைப் போன்று நல்லமல்கள் என்ற நீரை அள்ளியெடுக்கவே இங்கு வந்தோம் , நமது வருகையின் நோக்கத்தை அல்லாஹூத்தஆலா பின்வருமாறு பிரகடனப்படுத்துகின்றான்.*

وما خلقت الجن والانس الا ليعبدون

*ஜின்னையும், மனிதனையும் என்னை அவர்கள் வணங்கு (அறி)வதற்காகவே அன்றி நான் படைக்கவில்லை. 52 : 56*

*மறதியுள்ள தனது அடியான் உலகின் சிங்காரக்கவற்சியில் மாட்டிக் கொள்ளாமல் நல்லமல்கள் , அழகிய அகீதாக்கள் என்ற மதுரமான நீரை எடுத்துக் கொண்டுவர வேண்டும் என்பது அல்லாஹ்வின் நாட்டமாகும். அதனால் , தான், கரீம், றஹீம் என்ற நப (ரான திருதி தூத)ரை எம்பால் அனுப்பி வைத்தான்.*

*அவரின் ஒரு கரம் றப்புடையசக்தி மிக்க கரத்திலிருக்கின்றது , மறு கரம் படைப்பின் பரிபாலனத்திற்காக அங்குமிங்கும் வியாபித்திருக்கின்றது , அவர்களுக்கான பெயர் தான* حبل الله *அல்லாஹ்வின் பலமிக்ககயிறாகும்.*

*யாராவது பலமான அல்லாஹ்வின் இக்கயிற்றைப்பிடித்துக் கொள்கின்றானோ அவன் அல்லாஹ்வின் கரத்தைப் பிடித்துக் கொண்டான், அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்*

ان الذين يبايعونك انما يبايعون الله يد الله فوق ايديهم

*நிச்சயமாக எவர்கள் உம்மிடம் உடன்படிக்கை செய்கிறார்களோ அவர்கள் உடன்படிக்கை செய்வதெல்லாம் (உம்மிடமில்லை) அல்லாஹ்விடம் தான், அல்லாஹ்வுடைய கை அவர்களுடைய கைகளுக்கு மேல் இருக்கிறது, 48: 10*

*வாளியில் பெரிய முரட்டுக்கயிறை இன்னுமொருதுணையில்லாமல் கட்ட முடியாது , தனால் அதனை சிறிய மெல்லிய கயிறால் பிணைக்கப்படுகிறது, இதுபோன்று எம்மால் நேராக றசூலுள்ளாஹி ஸல்லல்லா ஹு அலைஹி வசல்லமவர்களின் முந்தானையைப் பிடிக்க முடியாது. அதைப்பிடிப்பதற்கு "விலாயத்" என்ற உறுதியான கயிற்றைப் பிடிக்க வேண்டியது அவசியமாகும், எமது ஷெய்குமார்கள் றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் வரை எம்மைச் சேர்த்து வைக்கின்றனர், நபியவர்கள் அல்லாஹுத்தஆலா வரை சேர்த்து வைக்கின்றார்கள்.*

*அடியேனின் இந்த விளக்கத்தின் மூலம் றிஸாலத்தின் அவசியமும், விலாயத்தின் அவசியமும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது , ஒரு " வலி " எங்வளவு பெரியவராக இருந்தாலும் , அல்லாஹ்வின் திருச்சமுகத்திற்கு எடுத்துச் செல்ல முடியாது. றஸூலுள் ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்கள் வரை தான் எடுத்துச் செல்ல முடியும், அல்லாஹ்விடம் சேர்த்து வைப்பது நபியவர்களால் மட்டுமே முடியும் , பெறுமதியான வாகனமும் விமான நிலையம் வரை தான் எடுத்துச் செல்லும் அடுத்த நாட்டுக்கு விமானத்தில் தான் செல்ல முடியும்,*

*" றிஸாலத்தின் " அகீதாவுக்கு மூன்று விடயங்களை ஏற்றுக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.*

*(1) நேரடியாக அல்லாஹ்விடமிருந்து எந்த ஒரு நிஃமத்தையும் எம்மால் பெற முடியாது. ஏதும் கிடைப்பதாயின் றசூலின் மூலமாகவே கிடைக்கும், இல்லையாயின் "றிஸாலத் "தின் அவசியம் இல்லாமல் போய் விடும் , உலகத்திற்கு றஸூல் மார்களின் வருகை அர்த்தமற்றதாகி. விடும் , ஏனெனில் றப்புத்தஆலா கொடுக்கின்றான். நாம் பெற்றுக்கொள்கின்றோம் , பின்னர் றஸூலுக்கு என்ன அவசியம் ?*

*(2) நம்மைப் போன்று சுதந்திரமில்லாத வராக றசூல் இல்லை. (அவர் சுதந்திர முள்ளவர்) அவரால் றப்பிடமிருந்து பெற்று நமக்குத் தர இயலும், றப்புத் தஆலா விட மிருந்து எமக்கு எதையும் பெற்றுத்தர அவரால் முடியாவிட்டால் அவருக்கும் நமக்கும் சேர்த்து பெற்றுத் தருவதற்கு மற்றுமொரு ஷரீஅத்தின் திருத்தூதர் ஒருவர் தேவைப்படுவார் மக்கள் அவரின் உம்மத்தாக ஆகிவிடுவார்கள்,*

*(3) ற சூல் என்பவர் கொடுப்பவர் , எடுப்பவர். உம்மத்திடம் சேர்த்து வைப்பவர் என்பது றப்புக்கும் தெரியும், இவ்விரண்டு விதமான அறிவுமில்லாமல் உலகம் உறுதியாக நிலைத்து நிற்காது, நுபுவ்வத்தின் வஸீலாவை மறுக்கின்றவர்கள் இடைதுணை எதுவுமின்றி நேராக அல்லாஹ்விடமிருந்தே அவனுடைய அருளைப் பெற முடியும் எ ன்பவர்கள் எதார்த்தத்தில் றசூலுள்ளாஹி சல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்களின் "றிஸாலத் "தையே மறுக்கின்றனர் ,*

*அதாவது, கலிமாத் தைய்யிபாவின் மறுபகுதியாகிய " முஹம்மதுர் றஸூலுள்ளாஹ்வை மறுக்கின்றார்கள்.*

*றப்பிடமிருந்து அனைத்தையும் எம்மால் பெற முடியும் என்றால் , றசூலின் அவசியத் தேவை நமக்கு ஏன்? ந ஊது பில்லாஹ்' ....*

*றசூல் என்பவர் அல்லாஹ்விடமிருந்து பெறுவதில் அவனுடன் தொடர் பாகியுள்ளார். நமக்குத் தருவதில் நம்முடன் உறவாயுள்ளார். என்பதை இப்போது புரிந்திருப்பீர்கள். இதனால் தான் அல்லாஹ்வின் திருத்தூதர் என்று அவர்களைக் கூறுகின்றோம் இவ்விரு தொடர் பாலும் அவர்களுக்கு இருவிதமள் பூரணத்துவம் கிடைக்கின்றன. இதனால் தான் நபியவர்களைத் திருக்குர்ஆன் "றசூலுள் ளாஹ் என்றும் "றசூலுக்கும் "உங்களுடைய "றசூல் " என்றும் குறிப்பிடுகின்றது,*

*இவ்வுலகிற்கு நாமும் , அல்லாஹ்வின் திருத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களும் அனுப்பப்பட்டாலும் இவ்விருவரின் வருகையிலும் நிறையவேறுபாடுண்டு. நமது வருகையைத் திருக்குர்ஆன் " படைப்பு " என்று கூறுகின்றது.*

والله خلقكم وما تعملون

*அல்லாஹ் உங்களையும், நீங்கள் செய்கின்ற வற்றையும் படைத்தான். 37: 96*

وما خلقت الجن والانس الا ليعبدون

*ஜின்னையும், மனிதனையும் என்னை அவர்கள் வணங்கு(அறி)வதற்காகவே அன்றி நான் படைக்கவில்லை. 52 : 56*

*றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் வருகையை "பஃதத" "றிஸாலத் " என்ற பதங்களால் அடையாளப்படுத்தப்பட்டுள்ளன*

*அல்லா ஹூத்தஆலா கூறுகின்றான்,*

هو الذي بعث في الاميين رسولا

*அவன் எத்தகையவனென்றால், எழுத்தறிவில்லா மக்களில் அவர்களிலிருந்தே ஒரு றசூலை அனுப்பினான். 52. 56*

*மேலும் கூறுகின்றான்.*

هو الذي ارسل رسوله بالهدى ودين الحق ليظهره علي الدين كله ولو كره المشركون

*" அவன் எத்தகையவனென்றால் , முஷ்றிக்குகள் வெறுத்தாலும் சரி , மற்றெல்லா மார்க்கங்களை விட இ(ம்மார்க்கத்)தை உயர்த்துவதற்காக நேர்வழியைக் கொண்டும் சத்திய மார்க்கத் தைக் கொண்டும் தனது றசூலை அவன் அனுப்பினான். 61:9*

*"பஃதத் , றிசாலத் என்ற இரு பதங்களும் மூன்று நபர்களுக்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன நமது விடயத்தில் "படைப்பு خلق " என்ற சொல் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.*

*இந்த வேறுபாட்டிற்கு சில காரணங்கள் உள*

*(1) நாம் நமது காரியத்திற்காக நமது பொறுப்பிலேயே வந்துள்ளோம் , ஆனால் அல்லாஹ்வின்"றசூல்மார்கள் அல்லாஹ்வின் வேலைக்காக அல்லாஹ்வின் பொறுப்பில் வந்துள்ளார்கள்.*

*உதாரணமாக , ஒருவர் தனது தேவைக்காக ஒரு நாட்டுக்காகச் செல்கின்றார். மற்றுமொருவர் அரச தூதுவர் என்ற அந்தஸ்த்தில் அரச செலவில் அவர்களின் பணிக்காக அவர்களின் பொறுப்பில் செல்கின்றார். இவ்விருவரின் பயணத்திலும் நிச்சயமாக வேறுபாடுண்டு . அரச தூதுவரின் செலவும் பேச்சுவார்த்தையும் அரசினைப் பிரதிபலிக்கும், தனது வேலைக்காகச் சென்றவர் இவ்வாறல்ல.*

*(2) நாம் எம்மைத் தயார்படுத்தவே வையகம் வந்தோம். அதாவது சரியானதும் , சீரானதுமான அகீதா வைப் படித்து முதலில் உண்மை முஃமினாக வேண்டும். பின்னர் , நல்ல மல்கள் செய்து " தக்வா " என்ற உள்ளச்சம், பயபக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டியதுநமது கடமையாகும் , ஆனால் அல்லாஹ்வின் திரு தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் தன்னைத் தயார் படுத்துவதற்காக அன்றி அடுத்தவர்களைத் தயார்படுத்தவே வருகை தருகின்றனர். அவர்கள் மூலமாகவே மற்றவர்கள் தக்வாதாரி யாகின்றனர்.*

*நாமும் திருத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களும் கப்பலில் பயணம் செய்வதாக வைத்துக்கொள்வோம். இருவரின் நோக்கமும் வேறு நாம் ஓர் இடத்தை நாடிப் பயணிக்கின்றோம் திருத்தூதர் அவர்கள் எம்மைப் பாதுகாப்பாக வெற்றிகரமாகக்கரையில் சேர்ப்பதற்காகப் பயணம் செய்கின்றார்கள்.*

*பிரயாணியும், மாலுமியும் கப்பலில் தான் பயணிக்கின்றனர் , கப்பலும், கடலும், பிரயாணத்தின் தொடக்க மும் முடிவும் ஒன்று தான், ஆனால், பிரயாணி கரையைக் கடப்பதற்காகவும், மாலுமி பிரயாணிகளை பாதுகாப்பாகவும் , வெற்றிகரமாகவும் கரையில் சேர்த்து வைப்பதற்காக பிரயாணம் செய்கின்றனர், இதனால்,*

*பிரயாணி பணம் கொடுத்து பயணிக்கின்றார் மாலுமி ஊதியம் பெற்று பயணிக்கின்றார்*

*(3) . நாம் உலகத்திற்கு வரும் போது எதுவும் அறியாதவர்களாகவே வந்தோம். வந்த பின்புதான் அனைத்தையும் கற்றோம் ஆனால் தூதர்கள் றப்பிடம் எல்லாவற்றையும் கற்றபின் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்காகவே வந்தார்கள்,*

*நாம் உகத்தின் சூழலுக்கு ஏற்ற விதத்திலே நடந்து கொள்கின்றோம், ஆனால் றசூல் என்பவர் மாசடைந்த சூழலுக்குள் வந்து சூழலையும் , மக்களையும் பரிசுத்தப்படுத்துகின்றார் அதாவது எமது செயல்களால் சூழலும் , நாமும்மா சடைகின்றோம் , றசூலின் வருகையால் நாமும் நமது சூழலும் பரிசுத்தமடைகின்றன.*

*நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்.*

قال اني عبد الله آتاني الكتب وجعلني نبيا وجعلني مباركا اين ما كنت واوصني بالصلوة والزكوة مادمت حيا وبرا بوالدتي

*நிச்சயமாக நான் அல்லாஹ்வின் அடிமை , எனக்கு ஒரு வேதத்தை அவன் கொடுத்து , என்னை நபியாகவும் ஆக்கியுள்ளான் , நான் எங்கிருந்தாலும், பறக்கத் செய்யப்பட்டவனாகவும், என்னை ஆக்கியுள்ளான். இன்னும் நான் ஜீவித்திருக்கும் காலமெல்லாம் . தொழுகையைக் கொண்டும் , சக்காத்தைக் கொண்டும் எனக்கு உபதேசித்துள்ளான். இன்னும் எனது தாயாருக்கு நன்மை செய்யவேண்டுமென்றும் (கட்டளையிட்டுள்ளான்) 19: 31 , 32.*

*இத்திருவசனத்தில் அனைத்து விடயங்களும் இறந்த காலத்திலே கூறப்பட்டுள்ளன. அதாவது யாவும் கற்ற பின்புதான் இங்கு வந்துள்ளார்கள் என்பது புலனாகின்றது. இது தான் அல்லாஹ்வின் திருத்தூதரின் தகுதியாகும் எம்பெருமானார் செய்யிதுல் முர்சலீன் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் பிறப்பிலேயே சம்பூரணமான "ஆரிபுற்றசூல் " ஆக இருக்கின்றார்கள். ஏனெனில்,*

*நபிகள் நாதர் கோமான் முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு போதும் பாவத்தின் பக்கம் நெருங்கியதில்லை , பால் குடிக்காலத்தில் செவிலித்தாய் பீவி ஹலீமா நாயகி றழியல்லாஹூ அன்ஹா அவர்களின் பராமரிப்பில் இருக்கும் போது சிறுவர்கள் விளையாட அழைத்தால் தனது பிஞ்சு வாய் திறந்து நாம் இதற்காகப் படைக்கப்படவில்லை*

ما خلقنا لهذا

*இது தான் அல்லாஹ்வின் திருத்தூதரின் இயற்கைத்தன்மையாகும் , அல்லாஹ்வின்திருத தூதர்கள்வையகம் வருவதற்கான இரகசியமாகும்.*

*யாராவது .ஒருவர் அல்லாஹ்வின் திருத்தூதரைத் தங்களைப் போன்றே அறிவில்லாதவர் என்றோ எதைப் பற்றிய தகவலும் தெரியாதவர் என்றோ , நுபுவ்வத்திற்கு முன் மார்க்கமில்லாமல் வழி கேட்டிலிருந்தா என்றோ கருதுவார்களாயின் , அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதரின் தகுதியையும், கண்ணியத்தையும் நிராகரிக்கின்றவர்களாகும் , இவர்கள் கூறுவது போன்று றசூல் மார்களும் பாவம் செய்வார்கள்? (ந ஊது பில்லாஹ்) என்றும் , அவர்களும் தங்களைத் திருத்திக்கொள்வேண்டியிருக்கின்றது என்று இருந்தால் , உம்மத்தினரை சீர்திருத்துவதற்கு ஒருத்திருத்தூதர் இருப்பது போன்று அவர் களுக்கும் ஒரு திருத்தூதர் இருப்பது அவசியமாகும்,*

*வெற்றி பரிசுத்தம் மூலமே கிட்டும், தொழுவதும் , றப்பைத்து திப்பதும் பரிசுத்தத்தின் முக்கிய வேர் என்பதை பின்வரும் திருவசனத்தின் மூலம் அறிகின்றோம்,*

قد افلح من تزكى وذكر اسم ربه فصلي

*(பாவங்களை விட்டும் தம்மைப்) பரிசுத்தப்படுத்திய வர் திட்டமாக வெற்றியடைந்து விட்டார். தம்ளப் பின் திருப்பெயரை அவர் தியானம் செய்து, பிறகு தொழுதார். 87: 14- 15*

*பரிசுத்தமும் , தெளிவும் தான் வெற்றியின் அழகாகும் , என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்,*

*அப்படியாயின் சுத்தப்படுத்துவது யார்? இதற்கு திருக்குர்ஆன் இப்படி பதில் கூறுகின்றது.*

ويزكيهم ويعلمهم الكتاب والحكمة

*அவர்களைப் பரிசுத்தப்படுத்தி , அவர் களுக்கு வேதத்தையும் , ஞானத்தையும் கற்றுக் கொடுப்பார், 62 : 2*

*மேலும்,*

خذ من اموالهم صدقة تطهرهم وتزكيهم

*(நபியே! ) அவர்களுடைய பொருட்களிலிருந்து (பாவகாரியத்திற்காக ஒரு பகுதியை) தருமமாக நீர் எடுத்துக் கொண்டு , அதன் மூலம் அவர்களை(ப் பாவங்களைவிட்டும்) நீர் தூய்மையாக்கி வைத்து அவர்களை (யும் அவர்களின் உள்ளங்களை விட்டும்) நீர் தூய்மையாக்கி வைத்து அவர்களுக்குத்துஆச் செய்வீர்களாக! 9_ 103*

*மேற்கண்ட திருவசனத்திலிருந்து பரிசுத்தமாகின்றவர்கள் நாம் என்றும் , பரிசுத்தப் படுத்துகின்றவர்கள் சங்கையான அல்லாஹ்வின் திருத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களாகும் என்பதைத்தெரிந்து கொள்கின்றோம்.*

**நான்கு பொருட்கள் நம்மிடம் காணப்படுகின்றன.**

*1 - உடல் 2 - மூளை 3 மனம் . 4 றூஹ்*

*றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் நமக்கு நான்கு பொருட்களைத் தந்துள்ளார்ள். அவை*

*1_ ஷரீஅத் . 2 – தரீக்கத் 3- ஹகீகத் 4 - ம ஃரிபத்*

*றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் ஷரீஅத்தின் மூலமாக நமது உடலையும், தரீக்கத்தின் மூலமாக நமது மூளை மற்றும் கற்பனைகளையும் ஹகீகத்தின் மூலமாக மன தையும், மஃரிபத்தின் மூலமாக றூ ஹையும் பரிசுத்தப்படுத்தினார்கள்.*

*ஷரிஅத்தின் கேந்திர இடம்*

*றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் திருமேனியாகும் , ஆரோக்கியத்தின் கேந்திரம் அன்னாரின் புனித இதயமாகும். இது போல் ஹகீகத்திற்கான சிற்று அன்னாரின் றூஹின் ஊற் றாகும். மஃரிபத் நபிகள் நாதர் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் புனித சிற்றாகும்.*

*நம்மிடம் காணப்படும். 4 விதமான அசுத்தங்களை அகற்றுவதற்கு 4 விதமான புனித நீரை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் வழங்கியுள்ளார்கள்.*

*நமது "அம்மாறா நப்ஸ் " என்பது முழுமையான நஜீஸாகும் , எந்த ஒரு நீராலும் இதை சுத்தமாக்க முடியாது இதனை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் காதல் என்ற அக்கினியால் அதன் எதார்த்தத்தைச் சுட்டுக்கரிப்பதனால் தான் சுத்தமாகும்.எதார்த்தம் மாறும் போது அதன் அசுத்தம் சுத்தமாகின்றது.*

*நிலத்திற்கு நீரும் , நந்தவனத்திற்கு மழையும், அவசியமாக இருப்பது போன்று உலகத்திற்கு றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமலர்கள் அவசியமாகும்.*

*மழையில்லாமல் பூமியின் எப்பகுதியும். எல்லாக் காலத்திலும் இருப்பதில்லை. இவ்வாறே எந்த ஒரு தனி மனிதனும், அவர் எவ்வளவு உயர் தகுதியிலிருந்தாலும், அவரின் உலக வாழ்வில் , கப்றில், மஹ்ஷர் பெருவெளியில் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வசல்ல மவர்களின் உதவியின்றி வாழ ,இருக்க - முடியாது*

*தோட்டத்தில் வளருகின்ற செடி, கொடி காய் , கனி இவற்றின் பசுமை , இனிமை, சாறு உள்ளிட்ட யாவும் மழை வழங்கிய கொடையாகும் , இவ்வாறே மனிதனின் ஒவ்வொரு முதிர்வு (பூரண மு)ம் றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம வர்களின் நன்கொடையாகும்.*

*நமக்குக் கிடைப்பதெல்லாம் இறைவன் மீது ஆணையாக நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் மூலமாகத்தான் கிடைக்கின்றன, றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் பேரருள் நம்மனைவரின் உள்ளங்களில் ஆழப் பதிய வேண்டும் என்று அல்லாஹ்விடத்தில் துஆக் கேட்கின்றோம்,*

*இங்கு சிலர் இப்படிக் கேட்கலாம். நபிகள் திலகம் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களுக்கு அல்லாஹ்வோடு நேரடித் தொடர்பு இருந்தால் ஹளறத் ஜிப்ரி யீலின் இடைதுணை எதற்கு ?*

*வஹியின் சங்கிலித் தொடர் எதற்கு ?*

*பின் வரும் திருக்குர்ஆன் வசனத்தைப் பாருங்கள்,*

جاعل الملائكة رسلا اولي اجنحة

*இறக்கைகளுடைய வரிகளான மலக்குகளைத் தூதர்களாக்கியவன் தூயவன், 35: 1*

نزله روح القدس علي قلبك

*(ஹளறத்) ஜிப்ரயீல் தான் இதை (திருக்குர்ஆனை) உமது இதயத்தில் இறக்கினார் 26: 193, 194*

*மேற்கண்ட திருவசனங்களின் படி இடை துணையின்றி அல்லாஹ்விடமிருந்து எதையும் பெற முடியாது . அவ்வாறே நபியவர்களும் வேறு துணையின்றி அல்லாஹ்விடமிருந்து பெற முடியாது.*

*ஷரிஅத்தின் கலைச்சொல்லில் " றூஹுல் குத்ஸ் " என்று கூறப்படுகின்ற ஜிப்ரயீலின் அல்லது வேறு ஒரு தூதரின் உதவியின்றி அல்லாஹ்விடமிருந்து ஒன்றைப் பெறுவதற்கு நபியவர்களுக்கும் தேவைப்படுகின்றது. இதனால் தான் ஹளறத் ஜிப்ரயீலையும், அவர்களின் உதவியாளர்களையும் . "தூதர்கள் " என்று அல்லாஹுத்தஆலா குறிப்பிடுகின்றான்.*

*இதற்கான பதில்*

*வஹியும் , ஹளரத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்களின் வருகையும் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காக வேண்டியே அன்றி நபிகளாளுக்கு அறிவூட்டுவதற்காக அல்ல*

*றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்கு அனைத்து வகையான ஞானங்களையும் அல்லாஹுத்தஆலா கற்றுக் கொடுத்தே அனுப்பியுள்ளான் -ஆனால், சட்டங்கள் வஹியின் ஊடாக வரும் போது தான் அல்லாஹ்வின் சட்டங்கள் மக்களிடத்தில் அமுலாகும்.*

*இதற்கான ஆதாரங்களில் சில வருமாறு.*

*1_ திருக்குர்ஆனைப் பற்றி அல்லாஹுத்தஆலா பின் வருமாறு கூறுகின்றான்.*

هدى للمتقين

*பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழி காட்டும், 2 , 2*

*வஹியின் தொடர்பு றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்கு 40 தாவது வயதிலிருந்து தான் ஆரம்பமானது , ஆனால், நாற்பது வருட அன்னாரின் வாழ்வில் உண்மை. நம்பிக்கை ,பரிசுத்த்தமான வாழ்வு , எப்போதும் உண்மை பேசுதல் , உள்ளிட்ட நற்பண்புகள் நபிகளாரிடம் காணப்பட்டன.*

*காபிர்கள் கூட அன்னாரை அல் அமீன் நம்பிக்கையானவர் , சாதிக் குல்வஃதி வாக்கை சத்தியத்துடன் நிறைவேற்றுபவர் என்ற சிறப்புப் பெயரால் அழைத்தனர்*

*2 - நபிகளாருக்கு வஹியின் தொடர்பால் தான் ஹிதாயத் கிடைத்திருந்தால் , கடந்த நாற்பது. ஆண்டு காலம் அக்காலத்தில் வாழ்ந்த மக்களின் சூழலுக்கேற்ற சாதாரண வாழ்க்கையே வாழ்ந்திருக்க வேண்டும், ஆனால், நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் அவ்வாறு வாழவில்லை , என்று ஹதீதுகளில் காணமுடிகின்றது,*

*இக்காலப் பகுதியில் நபியவர்கள் ஷிர்க் , குப்றுகளில் ஈடுபடவில்லை. விளையாட்டுக் கேளிக்கைகள், குடி, பொய் உள்ளிட்ட வைக்கு அருகிலும் நபியவர்கள் செல்லவில்லை அல்லாஹ் அல்லாதவர் பெயரால் , உயிர்ப்பலி கொடுக்கவில்லை ' அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அறுக்கப்பட்ட மாமிசத்தைப் புசித்ததில்லை இந்த வழிகாட்டுதல் அன்னாருக்கு எந்த வஹி , அல்லது மலக்கின் மூலம் கிடைத்தது ?*

*(3) ஆரம்பத்தில் வஹி வரமுன் நபியவர்கள் ஹிறாக் குகையில் ஆறு மாதங்கள் இஃதிகாப் , தொழுகை , சஜிதா , று கூஉ , உள்ளிட்ட வணக்கங்களில் ஈடுபட்டார்கள் இக்காலப்பகுதியில் இந்த வணக்கங்களை அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தது யார் ? என்பதை ஆழமாகச் சிந்திக்க வேண்டும்,*

*( 4 ) றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்ல மவர்கள் மிஃராஜ் இரவில் "லா மகான் " இடம் என்று சொல்ல முடியாத " வெட்ட வெளியில் "அல்லாஹ்வைச் சந்தித்து உரையாடிய பின் , தொழுகையைப்பரிசாகப் பெற்றுத அதிகா லை திரும்பினார்கள். அன்று நபியவர்கள் சுபுஹுத் தொழவில்லை,*

*ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் ளுஹறிலிருந்து தொடர்ச்சியாக இருதினங்கள் நபியவர்களிடம் வருகை தந்து ஒவ்வொரு நேரத் தொழுகையையும் தொழுதார்கள், இந்த வகையில் ஐ வேளைத் தொழுகையும் பூரணமானது. இதைக் கவனத்திற் கொண்டு பின்வரும் விடத்தை ஊன்றிப் படியுங்கள்,*

*மிஃறாஜ் பயணம் பர்ஷிலிருந்து அர்ஷ வரை அமைந்திருந்தது. இவ்விரவில் பைத்துல் முகத்தஸில் அனைத்து நாமார்களுக்கும் இமாமாக நின்று தொழுவித்தார்கள். இந்த வகையில் நடியவர்கள் இமாமாகவும் , ஏனைய நபிமார்கள் அவர்களைப் பின்பற்றியவர்களாகவும் ஆனார்கள் இவர்களுள் சிலர் முஅத்தின், வேறு சிலர் முகப்பிர் ( இமாமின் தக்பீனர பிரதிசெய்பவர்.)*

*ஒரு பக்கம் தொழுகை நடக்ஷழ்த்தப்படுகின்றது. மறுபக்கம் தொழுகை எடுக்கப்படுகின்ற அதிசயத்தை நன்குசிந்தியுங்கள் , நபிமார்கள் தங்களுடைய உம்மத்தினருக்கு தொழுகையின் சட்டத்தைக் கற்றுக் கொடுத்த பின் அவர்களைத் தொழவித்து முள்ளார்கள் , இமாமாக நிற்பவர் பின்னால் தொழுகின்றவர்களை விட அதிக அறிவுள்ளவராக இருக்க வேண்டியது நியதி அப்படியாயின் சட்டம் தெரிந்தும் படித்தும் கொடுத்த நபிமார்களுக்கு இமாமாக நின்று தொழுவித்த நபியவர்கள் யார் ?*

*( 5 ) றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களுக்குரிய வஹி (முழுவதும்) ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் மூலமாக வழங்கப்படவில்லை , வஹியின் அதிகமான பகுதிகள் ஹளறத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தொடர்பின்றி நேரடியாகவே அன்னாரின் புனித கல்பில் போடப்பட்டவையாகும்,*

*அல்லாஹூத்தஆலா கூறுகின்றான்.*

وما ينطق عن الهوى ان هو الا وحي يوحي

*( எதையும் ) மன விருப்பப் படி அவர் பேசுவதுமில்லை அது (அவருக்கு) அறிவிக்கப்படுகின்ற வஹீயே தவிர வேறில்லை. 3_4*

ثم دنا فتدلي فكان قاب قوسين او ادني فاوحي الي ربه عبده ما اوحي

*பின்னர் அவர் நெருங்கிவந்தார். பின்னும் , அதிகம் நெருங்கினார், அ(ந்த நெருக்க மான)து. வில்வின் இரு முனைகளின் அளவுக்கு அல்லது, (அதைவிட) அதிக நெருக்கமாக இருந்தது , பிறகு (றப்பாகிய) அவன் தான் அறிவிக்க வேண்டியவற்றைத் தன் அடியாருக்கு அறிவித்தான். 53 : 10*

*ஹளறத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களால் நெருங்க முடியாத இடத்தில் நெருக்கத்தின் குறிப்பான ஓர் இடத்தில் நபியவர்களுக்கு வஹி வழங்கப்பட்டுள்ளது என்பது வெளிப்படையான ஒரு விடயம். அதனால்,*

*றப்புல் ஆலமீனுக்கும், அவனது இனிய நேசரான றஹ்மதுன் லில் ஆலமீனுக்கும் இடையில் ஹளறத் ஜிப்ரயீலின் வருகையும் , வஹியின் தொடர்ச்சியும் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காகவே அன்றி அறிவுக்காக அல்ல என்பதை ஏற்றுக் கொள்ளவே வேண்டும். இவ்வாறு இல்லையாயின் , றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் உம்மத்தாக நாம் இருப்பது போன்று நபியவர்கள் ஹளறத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உம்மத்தாக இருக்க வேண்டும், கலிமாவில் நபியவர்களின் பெயரை உச்சரிப்பது போன்று ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பெயரையும் உச்சரிக்கவேண்டும்,*

***அத்தியாயம் : - 3 - நபி***

*நபி : இதில் இரு பகுதிகள் உண்டு*

*(1) இஸ்லாத்தில் நுபுவ்வத்தின் படித்தரம் .*

*(2) இஸ்லாத்தில் நபியின் தகுதி*

*வெற்றியின் அடிப்படை " தௌஹீத் அல்ல ! ஈமான் ! ஈமானின் மூலச் சக்கரம் "முஹப் பத்துர்ரசூல் "*

*வெற்றியின் அடைப்படை மூலம் "மஹப்பத் " இதற்கான ஆதாரங்கள் சில வருமாறு (1) அல்லாஹ்வின், தாத் உள்ளமை –ஸிபாத்-பண்புகள், சொர்க்கம், நரகம், மீண்டும் எழுப்பப்படல், மஹ்ஷர் வெளியில் நிற்றல் , விதி, மலக்குகள் உள்ளிட்ட எல்லாவற்றையும் நம்பியவன் தான் இப்லீஸ் ஆயினும், அவனால் வெற்றி பெற முடியவில்லை.*

*அவன் கூறுகின்றான்*

وبعزتك لاغوينهم اجمعين الا عبادك منهم المخلصين

*(அப்பொழுது) " உன்னுடைய கண்ணியத்தின் மீது ஆணையாக ! அவர்கள் அனைவரையும் திண்ணமாக நான் வழி கெடுப்பேன். " என்று அவன் (இப்லீஸ்) கூறினான்.அவர்களிலிருந்து அந்தரங்க சுத்தியானவர்களான உன்னுடைய அடியார்களைத் தவிர, 38 : 83*

*இப்லீஸ் அல்லா ஹ்வின் உள்ளமை (தாத்) பண்புகள் உள்ளிட்டவையை நன்கு அறிந்துள்ளான், அவ்வாறே உளத்தூய்மையுள்ள நல்லடியார்கள் , விதியை நம்பியவர்கள், இப்லீசின் சூழ்ச்சிகளை நன்கறிந்து கொண்ட நிபுணர்கள் என்பதையும் இப்லீஸ் நன்கு விளங்கியுள்ளான்,*

قال رب فانظرني الي يوم يبعثون

*" என்னுடைய றப் பே ! அவ்வாறாயின் அவர்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படும் நாள் வரை எனக்கு அவகாசம் கொடுப்பாயாக " என்று கேட்டான். 38 : 79*

*இப்லீஸ் கியாமத் நாளைப்பற்றியும் , கியாமத்தின் அமளிகளையும் அவன் அறிந்து வைத்துள்ளான் என்பதை மேற்கண்ட திருவசனத்திலிருந்து தெரிய வருகின்றது,*

لاملئن جهنم منك وممن تبعك

*உன்னி லிருந்தும் , அவர்களில் உன்னைப் பின்பற்றியவர் அனைவரிலிருந்தும் நரகத்தைத் திண்ணமாக நிரப்புவேன், 38 : 85*

*சொர்க்கம் , நரகம் உள்ளிட்டவையை இப்லீஸ் நன்கு அறிவான் என்பதை இதிலிருந்து தெரிய வருகின்றது , ஈமானின் அனைத்து அம்சங்களையும் நம்பிய இப்லீஸ் நுபுவ்வத்தை அவன் மறுத்த போது தான் சாபத்திற்குரியவனான்,*

*(2) நுபுவ்வத்திற்கும், தௌஹீதுக்க்குமிடையிலுள்ள தொடர்பு அரசாங்க முத்திரையுள்ள நாணயத்தாளைப் போன்றதாகும் , நாணயத்தாளுக்குப் பெறுமதி அரசாங்கமுத்திரை. முத்திரை அழிந்தால் அது சாதாரண காகிதம் மட்டுமே*

*இவ்வாறே நுபுவ்வத்தின் முத்திரையுள்ள . "தௌஹீது " க்குத் தான் மறுமையில் பெறுமதியாகும், கலிமத்துத் தௌஹீதும், கலீமத்துத் தய்யிபாவும் ஒன்று தான் இதில் , இரு பகுதிகள் உண்டு. அதில் முதற் பகுதி தௌஹீதைக் கூறுகின்றது . மறு பகுதி நுபுவ்வத்தைக் கூறுகின்றது.*

*தௌஹீத் கலிமாவில் இருவரின் பெயரும் கூறப்பட்டிருப்பதைக் கவனத்திற் கொள்க கலிமாவின் முதற் பகுதியில் தௌஹீதுக்கான தாளின் பெயர் உண்டு , மறுபகுதியில் அதற்குரிய அரசரின் முத்திரை இருக்கின்றது.*

*அதனால் இந்தத் தௌஹீது " ஈமானியத் தௌஹீத் "ஆகி விட்டது. "தௌஹீத் "மட்டும் விமோசனத்திற்குப்போதுமாக இருந்தால் , இக்கலிமாவில் மறு பகுதி நிச்சயமாக இடம்பெற்றிருக்காது.*

*(3) திருக்குர்ஆனில் எந்த இடத்திலும் அல்லாஹுத்த ஆலா " தௌஹீத்வாதிகளே !" என்று விளிக்கவில்லை. மாறாக ஆண்களை "முஃமின்களே ! " என்றும் , பெண்களை "முஃமினாத் "என்றும் தான் விளித்துள்ளான், "முவஹ்ஹித் ' "முவஹ்ஹிதாத் " என்று விளிக்கவில்லை,*

*"தௌஹீத் " மட்டும் விமோசனத்திற்குப் போதுமாக இருப்பின், திருக்குர்ஆனில் ஏதாவது ஓர் இடத்திலாவது "மு வஹ்ஹித் " "மு வஹ்ஹிதாத் " என்று அழைத்திருப்பான்,*

*(4) முஸ்லிம் கூட்டத்தினர்களில் பலர் "தௌஹீத்" பற்றிப் பேசுகின்றனர் இவ்வாறு பேசுபவர்களுள்*

*சீக்கியர்கள், ஆரியர்களில் சித்தர்கள், கிறிஸ்த்தவர்கள் உள்ளிட்ட சிலர் அடங்குவர் 'இவர்களுள் எவரையும்" முஸ்லிம்கள் " என்று கூறுவதில்லை , இவர்களுக்கு மறுமையில் விமோசனம் கிடைப்பது சாத்தியமுமில்லை, நுபுவ்வத்தை மறுத்ததுதான் இதற்குரிய காரணமாகும்,*

*"தௌஹீதை " " நுபுவ்வத் " என்ற கண்ணாடியில் பாருங்கள் , ! கஃபத்துள்ளாஹ்வின் பார்வையையும், மதீனத்து மாமன்னரின் பச்சை குப்பாவின் கீழ் உள்ள புனித ரௌழாவின் புனித திருவாசலையும் முகத்தாலும், அதத்தாலும் பார்க்கும் போது தான் "முஃமின் " ஆவீர்கள்,*

*(5) ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் தொடக்கம் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் வரையில் விண்ண கத்து மார்க்கங்கள் பல. வந்துள்ளன.*

*அவையனைத்தையும் தனித்தனியான மார்க்கமாகவே பார்க்கப்படுகின்றன. ஏன்? பல்வேறுபட்ட "தௌஹீத் "கோட்பாடுகள் இருந்ததனால் அல்ல !*

*இம் மார்க்கங்கள் மஹ்ஷர் , மறுமை, சொர்க்கம், நரகம் உள்ளிட்டவை பற்றிய அகீதாவில் மாறுபட்ட கருத்துக்களினாலும் அல்ல !*

*இம் மார்க்கங்களில் சொர்க்கம் , நரகம், உள்ளிட்டவையில் உள்ள மலக்குகள் பற்றியோ , அல்லது, " களாக்கத்று" பற்றிய அகீதாவை ஏற்றுக் கொள்வதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டதானாலும் அல்ல !*

*இவையனைத்தையும் விண்ணகத்து மார்க்கங்கள் யாவும் ஒட்டு மொத்த மாக ஏற்றுக்கொள்கின்றன. அப்படியிருந்தும் இவைவேறுபட்டிருக்கின்றன என்றால் , அவர்களின் "நுபுவ்வத்து"க்கள் வேறுபட்டிருப்பதே காரணமாகும்,*

*"மூஸவி " மார்க்கத்தின் நபியாக நபி மூஸா அலைஹிஸ்ஸலாமும் , "ஈஸவி "மார்க்கத்தின் நபியாக நபி ஈஸா அலைஹிஸ்ஸலாமும் விளங்கினார்கள். இதனால், மார்க்கம் நுபுவ்வத்தினால் தான் உருவாகின்றது. தனியானத் தௌஹீதால் அல்ல தனியானத் தௌஹீதையும் , மார்க்கத்தையும் மார்க்கமாக உலகத்திற்கு அல்லாஹுத்தஆலா அனுப்பி வைக்கவில்லை.*

*(6) மைய்யித்தைக்கப்றில் அடக்கம் செய்யப்பட்ட பின் ஒவ்வொரு மைய்யித்திடமும் தௌஹீத் , மார்க்கம், உள்ளிட்ட கேள்விகளுக்குப்பின் " நுபுவத் " பற்றியும் ஒரு கேள்வி கேட்கப்படும்.*

ما كنت تقول في هذا الرجل

*" இந்த மனிதரைப் பற்றி நீர் என்ன கூறுகின்றீர்"?*

*இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது யாது ?*

*"தௌஹீத்" பற்றிய அகீதா போதுமாக இருந்தால், முதற் கேள்வியான "உமதுறப்பு யார் " ? என்ற கேள்விக்கு "எனது றப்பு அல்லாஹ்" என்ற பதில் போதுமாக இருக்கும். மரணித்தவர் விமோசனம் அடைந்திடுவார் - அடுத்தடுத்த கேள்விகள் அவசியமில்லை . மேற்கண்ட ஆதாரங்களிலிருந்து தெரிய வருவது யாதெனில்,*

*கப்றின் விமோசனத்திற்கான மூலச் சக்கரம் "தௌஹீத் பற்றிய அதீதா "மட்டுமல்ல "ஈமானில் "மட்டுமே தங்கியிருக்கின்றது. ஈமானின் மைய்யப்புள்ளி " நுபுவ்வத் " ஆகும் , மைய்யித்தை அடக்கம்*

செய்ய முடியாத சூழ்நிலை ஏற்பட்டாலும், உதாரணமாக விலங்குகள் சாப்பிட்டால் , நீரில் மூழ்கினால், எரியுண்டு சாம்பலானால் , அல்லது அடக்கம் செய்யாமல் உடலைப்பாதுகாத்து வைத்திருந்தாலும் இக்கேள்விகள் கேட்கப்பட்டு கூலிகள் வழங்கப்படும்.

விசாரணைகள் யாவும் றூஹிடமே கேட்கப்படும். அதனால் அது மற்றவர்களுக்குத் தெரிவதில்லை, தாயின் வயிற்றில் மலக்கு புகுந்து கற்பறையில் வளரும் குழந்தையின் விதியை எழுதுகின்றார் தாய்க்கு அது புரிவதில்லை.

கப்று விசாரணையில் கவனிக்க வேண்டிய ஈமானியரசம் ததும்பும் செய்தி கப்றில்விசாரணையை முன் கர் நகீர் என்ற இரு மலக்குகளே மேற்கொள்வார்கள். மைய்யித்திடம் பின்வரும் மூன்று கேள்விகள் கேட்பார்கள்.

(1) உமது றப்பு யார் ?
பதில் :- அல்லாஹ்

(2) உனது மார்க்கம் எது ?
இஸ்லாம்

(3) இந்த மனிதரைப் பற்றி
என்ன கூறுகின்றீர் ?

முஃமினான அடியான் இவர் , "இவர் உண்மையான அல்லாஹ்வின் திருத்தூதர் என்று கூறுவான்.

மேற்கண்ட மூன்று கேள்விகளும் ஒரே மாதிரியாக இல்லை. அதன் ஒழுங்கில் மாற்றம் காணப்படுகின்றது " தௌஹீத், மார்க்கம் " என்ற இரு கேள்விகளிலும் "இவர் " என்ற வார்த்தை இல்லை, ஆனால், " நுபுவ்த் பற்றிய கேள்வியில் , மட்டும் "இவர் " என்ற சொல் இருக்கின்றது , உமது றப்பு யார் ? உமது மார்க்கம் எது ? என்று கேட்கப்பட்டது போன்று "உமது நபியார் ? என்று கேட்கப்படவில்லை.

கேள்விகள் மூன்று கேள்விக்கான எண்ணம் இரண்டுதான். இதிலுள்ள வித்தியாசம் அல்லாஹ்வையும், மார்க்கத்தையும் மைய்யித்திற்குக் காட்டுவதில்லை ,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் பேரழகைக்காட்டி" கறுத்த கிறுதாவுள்ள வெள்ளைத் திரு சந்திர வதனம் கொண்ட மதிமுகத் தாரைப் பற்றி நீர் என்ன கூறுகின்றீர்? என்று கேட்கப்படும்.

உயிருடன் எப்படிக் கூறினாரோ அவ்வாறே அங்கும் கூறுவார் , உலகத்தில் வாழும்போது எம்மைப் போன்ற சாதாரண மனிதர் என்றாரா ? அல்லது, எம்மைப் போன்ற மூத்த சகோதரன் என்றாரா அல்லது அகிலத்தின் அருட்கொடை நபிகள் கோமான் என்றாரா ? அல்லது, தன் நிகரற்ற , ஒப்புவமை இல்லாத நபி என்றாரா ?

எது இவ்வுலகில் அவர் மனதிலிருந்து நாவில் வெளிப்பட்டதோ அதுதான் கப்றில் வெளிப்படும். அதனால் இவ்வுலகில் முஃமினாக வாழ முயற்சி செய்யுங்கள். தீய கூட்டங்களுடன் சேர்ந்து கப்று வாழ்வை பாழாக்கவேண்டாம் என்று எச்சரிக்கின்றேன். தொலைக்காட்சி ஒரு

மனிதனை ஒரே நேரத்தில் எல்லா இடங்களிலும் காட்சி தருகின்றது. அவரின் பேச்சு எல்லா இடங்களிலும் ஒலிக்கின்றது. விஞ்ஞானம் இதை இப்போது நிரூபித்துள்ளது.

மின்னியலுக்கு இவ்வளவு ஆற்றல் இருந்தால், ஒளியின் சக்தியின் உச்ச வேகத்திற்கு அளவு சொல்ல முடியுமா ?

சிலர் இது தொடர்பாக ஆட்சேபனைகள் சிலவற்றை முன்வைக்கின்றனர். அவை வருமாறு

(1) ஒரே நேரத்தில் பல்வேறு இடங்களில் பல்லாயிரம் பேர் உலகில் மரணிக்கின்றார்கள் அடக்கம் செய்யப்படுகின்றனர். ஒரு விநாடியில் பல்லாயிரம் பேர் விசாரிக்கப்படுகின்றனர், அப்படியிருக்க "ஒரே ஒரு மதிமுக த் திரை " இத்தனை இடங்களிலும் எப்படிக் காட்ட முடியும் ?

பதில் :- ஒரு சூரியன் உலகில் எல்லாக் கோடிகளிலும் காண முடிகின்றது. எல்லா இடங்களிலும் இது சூரியன் என்று தனித்தனியாகச் சுட்டிக்காட்டப்படுகின்றது.

பல இலட்சம் கண்ணாடிகளை பல்லாயிரம் இடங்களில் ஒரே நேரத்தில் சூரியனுக்கு எதிரே வைத்தால், அந்த ஒரு சூரியன் இக் கண்ணாடிகள் அனைத்திலும் தனது "சுடரை " வேகமாகப்பிரகாசிக்கச் செய்யும். இது விண்ணியல் உதாரணம்.

(2) முஸ்லிம்களாகிய நாங்கள் வாழ்நாளில் ஒரு நாள் கூட முஸ்தபா மாபியின் திருவதனத்தைக் காணவில்லை, அப்படியிருக்க கப்றில் அன்னாரை எப்படித்தெரிந்து கொள்ள முடியும் ?

அபூஜஹ்லு போன்ற மக்கத்து வன் காபிர்கள் மக்கத்துப் பேரரசர் முஸ்தபா மா நபியை வாழ்நாள் முழுவதுமாகக் கண்டவர்கள் , அப்படியிருக்க, இவர்களால் நபிகள் கோமானின் திருவதனத்தை ஏன் அடையாளம் காண முடியாது போனது ?

பதில் ...

மனதிலிருக்கும் அறிவின் தொடர் பினால் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களை அறிந்து கொள்வார்கள் , றூ ஹானி , ஈமானிய அறிமுகம் புறப் பார்வையில் தங்கியதில்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுடன் இவ்வுலகில் உயிருடன் உறவு வைத்தவர்கள் கண்டிப்பாக கப்றில் அடையாளம் கண்டு கொள்வார்கள். மரணம் வரை அன்னாக் காணாவிட்டாலும் சரி சிலர் கனவில் காணும் பாக்கியத்தை அதிஷ்ட வசமாகப் பெற்றுள்ளனர் .சித்திபெற்ற காமிலானவர்கள் தங்களுடைய கல்பிலே நாயகத் திருமேனியைத் தரிசிக்கின்றனர் அன்னாரைக்கண்டதுமே தன்னை அர்பணித்து விடுகின்றனர்.

" இவரைப் பற்றி " என்று மலக்குகள் கப்றில் கேட்பதுஅவர் அறிவிலிருப்பவர் என்று புது விளக்கம்பகர்கின்றனர். இது அவர்களின் கற்பனையில் தோன்றியதாகும் , மலக்குககள் கேட்கின்றகேள்விகளுகுக்கான அனைத்து பதில்களும் அவர் அறிவில் இருக்கின்றன. அப்படியிருக்க முதலிரு கேள்விகளிலும் அவர் அறிவைச் சுட்டிக்காட்டி "இவர் " என்ற வார்த்தையை ஏன் கேட்கப்படுவதில்லை'?

காபிரின் அறிவில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களைப் பற்றிய அறிவு வெற்றிடமாகவே இருக்கின்றது , அதனால், பெருமானாரைப் பற்றிய அறிவு இல்லாத வரிடம் "இவரைப் பற்றி " என்ன கூறுகின்றீர் ? என்று கேட்டால், இவரை எனக்குத் தெரியாது தெரியாத வரை ஏன் என்னிடம் கேட்கின்றீர்கள் என்று தான் கேட்பார் ? ஆனால்

அவ்வாறு கூறுவதில்லை, ஹா ஹா அவரை எனக்குத் தெரியாதே ! என்று தான் கூறுவார், இவரின் கூற்று நேரில் பெருமானார் றஸூலே கரீம் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களை அவருக்குக் காட்டப்படுகின்றது அவர் பார்க்கின்றார். ஆனால் , புரிந்து கொள்ள அவரால் முடியவில்லை என்பதை இது சுட்டிக்காட்டுகின்றது.

கப்றில் மைய்யித்திற்கு நபிகளாரின் உருவப்படத்தை மலக்குகள் காட்டிக்கேட்பார்கள் என்று வேறு சிலர் விளக்கம் கூறுகின்றனர். இதுவும் அடிப்படையில்லாத வீணான வாதமாகும் காரணம்" போட்டோ " மனிதனுமில்லை, நபியுமில்லை. "போட்டோ " வுக்கு மனிதன் என்பது தவறாகும் "நபி " என்பது குப்றாகும்.

ஓர் உருவப்படத்தை எல்லா இடங்களிலும் காட்டப்படுமாயின் , அதே கேள்வி இங்கும் வரும், ஓர் உருவப்படத்தை பல இலட்சம் இடங்களில் என்ன விதத்தில் பார்க்கப்படுகின்றது.

உருவப்படங்கள் சில என்றாலும் தவறு தான் , சிலது இல்லை என்றாலும் தவறு தான் காரணம், கேள்வி கேட்கின்ற மலக்கு அதே நபர் தான் என்பது கவனிக்கத்தக்கது. அதனால் , விமோசனத்திற்கான மூலச்சக்கரம் " தௌஹீத் " அல்ல ! "ஈமான் " ஆகும்.

ஈமானின் அச்சாணி " நுபுவ்வத் " ஆகும்.

நபி .: -

இச்சொல் " நப உன் " என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்தது, இதன் பொருள் "தகவல் கொடுப்பவர் " என்பதாகும் , உதாரணமாக " கரீம் " என்றால் , கண்ணியமானவர் "ஹூஸைன் " என்றால் அழகர் என்று பொருள். இது போல் "நபி " என் பவர் தகவல் கொடுப்பவர் என்பது கருத்தாகும்.

தகவல் கொடுப்பவர் அல்லது , அறிவிப்பாளர் என்பதில் மூன்று கருத்துக்கள் காணப்படுகின்றன.

(1) - அறிவிப்பாளர்
(2) - முறைப்பாட்டை ஏற்பவர்.
(3) தகவல் வைத்துக் கொள்பவர்,

தகவல். வழங்குபவர் என்று பொருள் கொண்டால் , யாரிடமிருந்து தகவல் வழங்குபவர் என்பதை ஆழமாக சிந்திக்க வேண்டும். பத்திரிக்கை, வானொலி, தந்தி கடிதம், எழுத்து, மின்னஞ்சல், தொலைபேசி, தொலைநகல்,(இணையம் முகநூல்) பீ.பீ ஸி உலகசேவை உள்ளிட்ட எல்லாமே தகவல் வழங்குபவைதான்.

ஆனால், இவற்றிற்கெல்லாம். "நபி " என்று சொல்வதில்லை , ஹறாம், ஹலால் பற்றித் தகவல் சொல்பவர் ஷரீஅத் தின் சட்டங்களைப் பற்றிக் கூறுபவர் "நபி " ஆகும்.

ஒவ்வொரு ஆலிம் ஒவ்வொரு முஜ்ஹிதும், முஜத்திதும், இந்தத் தகவல்களைத்தான் கூறுகின்றனர்.

ஆனால், இவர்களை "நபி " என்று கூறுவதில்லை. அதனால் , நபியைப் புரிந்து கொள்வதற்குரிய குறிப்பான தகவல் இருத்தாக வேண்டும். அதனால் , நபிக்குரிய திட்டவட்டமான பொருள் இதுவாகும்.

*பத்திரிகை போன்ற செய்திகளைத் தருவது ஊடக தொழில் நுட்பச்சாதனங்களாகும். நூற்கள் , ஏடுகளிலிருந்து ஆய்வு செய்து மார்க்கச் சட்டங்களைத் தருபவர்கள் முஜ்த ஹிது , அல்லது ஆலிம்கள் ஆகும், இது போல், பூமியில் வாழ்பவர்களுக்கு அர்ஷின் தகவல்களையும், மறைவான உலகங்களின் தகவல்களைத் தருபவர் தான் "நபி " ஆவார்.*

*"நபி " யின் மறைவான அறிவை மறுக்கின்றவர்கள் உண்மையில் அவர்களின் " நுபுவ்வத் "தையே மறுக்கின்றனர். சிலரின் கருத்துப்படி " நபி " என்பவர் மார்க்க சட்டங்களை நன்கு அறிந்தவர் அதனால் உலக மக்களுக்கு மார்க்க அறிவை மட்டும் சொல்ல வந்தவர் என்று கூறுகின்றனர் , இப்படிக்கூறுபவர்கள் நபிக்கும் , முஜ்த ஹிதான ஆலிமுக்கு மிடையில் என்ன வேறுபாட்டை வைத்துள்ளனர் என்பது புரியவில்லை.*

*ஹதீதுகளில் சிலவற்றை உங்கள் முன்வைக்கின்றேன் அதன் படி "நபி " எங்கிருந்து தகவல் தருகின்றார்கள் என்பதை நீங்கள் புரிவீர்கள்,*

*ஒரு தினம் ஹளரத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் அவையில் கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்தார்கள். இதைக்கவனித்த காருண்ய நபியவர்கள். ஜாபிர் ! உங்கள் முகத்தில் கவலையின் சாயலைக் காண்கின்றேன் காரணம் யாது ? என்று கேட்க, அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே !*

*எனது தந்தை அப்துல்லாஹ் அவர்கள் உஹது யுத்தத்தில் ஷஹீதாகி விட்டார்கள். பெண்.பிள்ளைகளையும், கடனையும் விட்டுச் சென்று விட்டார்கள் , அதனால், அவரின் பிரிவு சகோதரிகளின் எதிர்காலம் , கடனை எப்படி இறுப்பது என்ற கவலை என் மனதை வாட்டி வதைக்கின்றது என்றார்.*

*உமது கவலை தவறானது என்பதற்கு உமக்கு ஒரு விடயத்தைக் கூறட்டுமா ? என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்ல மவர்கள் கேட்க உடனே சொல்லுங்கள் யா ரசூலல்லாஹ் ! என்று ஆர்வத்தோடு ஹளறத் ஜாபிர் றழியல்லாஹூ கூறினார்கள்.*

*அல்லாஹுத்தஆலா திரையின்றி எவருடனும் பேசியது கிடையாது , முதன் முதலாக உன் தந்தையிடமே அல்லாஹ் பேசினான். உமக்கு ஏதும் தேவை இருந்தால் கூறும் என்று உமது தந்தையிடம் அல்லாஹ் கேட்டான்.*

*எனது எஜமானே! எல்லாவற்றையும் நிரப்பமாக எனக்கு நீ வழங்கியுள்ளாய் ! அப்படியிருக்க வேறு என்ன ஆசை எனக்கு இருக்கின்றது ஆயினும், எனக்கொரு ஆசை உண்டு உலகத்திற்கு என்னை மீண்டும் அனுப்பிவை !கொதிக்கும் உஹது மணல் வெளியில் போராடி எனது தலை துண்டிக்கப்பட்டு குருதி வெள்ளத்தில் மிதக்க விரும்புகின்றேன் , உனது பாதையில். தலை துண்டிக்கப்பட்ட போது நான் பெற்ற ஆனந்தத்தை வேறு எதிலும் நான் அடையவில்லை என்றார் இதற்கு அல்லாஹுத்தஆலா இப்படிப்பதில் கூறினான்.*

*ஒரு வரை நான் சோதித்த பின்பும், ஒரு வரைச் சித்தியடையச் செய்த பின்பும் மீண்டும் சோதிப்பது நமது விதியில் இல்லை . றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களிடம் ஒரு மாது வந்து அல்லாஹ்வின் திருத்தூதர்அவர்களே !*

*எனது ஒரே மகன் உங்களுடன் ஜிஹாதுக்கு வந்து ஷஹிதாகி விட்டார். அவர் இப்போது சொர்க்கத்திலிருந்தால், பொறுமை செய்வேன், அதற்கு மாறாக இருப்பின் சரித்திரம் கூறுமளவுக்கு*

*அழுவேன் என்றார். இதைக் கேட்ட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் பின் வருமாறு கூறினார்கள், அல்லாஹ்வின் நல்லடியாளே !*

*சொர்க்கத்தில் எட்டு படித்தரங்கள் உண்டு. உமது மகன் சொர்க்கத்தின் அதி உச்சமான "ஜன்னத்துல் பிர்தவ்ஸில் " இருக்கின்றார் என்றார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்களின் காலத்தில் ஒருவருக்கு கல் எறிந்து தண்டனை வழங்கப்பட்டது,*

*அவரின் தண்டனை நிறைவேறிய பின் , அவரின் தீயசெயல்களைச் சிலர் நினைவுபடுத்தினர். இதைச் செவிமடுத்த செம்மல் நபியவர்கள் (ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம்) அவரைப் பற்றிக்குறை கூறாதீர்கள். அவர் , சொர்க்கத்தின் ஆறுகளில் சுழியோடிக் கொண்டிருக்கின்றார் , என்று கூறினார்கள்.*

*பாருங்கள் ! மதீனத்து மாமன்னர் மதீனத்துல் முனவ்வறாவிலிருந்து கொண்டு எந்த ஓர் ஊடகங்களுக்கும் கிட்ட முடியாத தகவல்களை வழங்குகின்றார்கள், நான் மதீனத்துல்முனவ்வறாவிலிருக்கின்றேன். மரணித்த ஷுஹதாக்கள் மறைவான உலகத்தில் வாழுகின்றார்கள். அத் தகவல்களை என்னால் எப்படிக் கூற முடியும் ? என்று கேள்வி கேட்டவர்களிடம் றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறவில்லை அல்லது , ஜிப்ரயீல் வந்ததும் அவரிடம் கேட்டுச் சொல்கின்றேன் என்றும் கூறவில்லை.*

*முன் யோசனை எதுவுமின்றி சட்டென பதில் கூறினார்கள். இப்படியான கேள்விகளை சங்கையான சஹாபாக்கள் றஸுலுள்ளாஹி சல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களிடம் கேட்டது அன்றாட நிகழ்வாகும் , காரணம் "நபி " என்பவர் மறைவான செய்திகளைக் கூறுபவர் என்பதை சஹாபாக்கள் தெளிவாக அறிந்திருந்தனர் இது தான் அவர்களின் அகீதாவாகும்.*

*மறைவானவற்றைப் பற்றி சஹாபாக்கள் கேள்வி கேட்பதும் , அதற்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் பதில் கூறுவதும் ஒன்றே நபியவர்களுக்கு மறைவான அறிவு உண்டு என்ற அகீதா சரியானது தான் என்பதற்கான தக்க ஆதாரமாகும்.*

*நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அறிவு பூர்வமான "நுபுவ்வத்தை " வழங்கியதாக அல்லாஹுத்தஆலா பின் வரும் திருவசனத்தின் மூலம் கூறுகின்றான்.*

وعلم ادم الاسماء كلها

*மேலும், ( பொருட்களின்) பெயர்கள் அனைத்தையும் ஆதமுக்கு அவன் கற்றுக்கொடுத்தான். 2:31*

*ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஒவ்வொரு சிறிய , பெரிய, அர்ப்மான, மகத்தான, உயர்ந்த, தாழ்ந்த உள்ளிட்ட அனைத்துப் பொருட்களின் பெயர்களையும் கற்றுக் கொடுத்தான். மேலும் , அணுவிலிருந்து, மலைவரை, நீர்த்துளியிலிருந்து மகா நதி வரை புவியிலிருந்து விண்ணகங்கள் வரை உள்ள நடந்தவை , நடப்பவை, நடக்கப் போகின்ற உள்ளிட்ட அனைத்தையும் கற்றுக் கொடுத்தான். தப்ஸீர் ஜலா லைன்,*

*மேலும், அல்லாஹுத்தஆலா புவியிலிருந்து விண்ணகம் வரையிலான அனைத்துப் பொருட்ககளையும் நபி ஆதம் அலைஹிஸ்ஸ அவர்களுக்குக் கற்றுக் கொடுத்ததாக அல் குர்ஆனில் பின்வருமாறு கூறுகின்றான்.*

ثم عرضهم علي الملائكة

*பின்னர், அவற்றை வானவவர்களுக்கு எடுத்துக் காட்டினான். 2 :- 31*

*மேற்கண்ட ஆதாரங்களின் படி அறிவு பூர்வமான தகவல்களை வழங்குபவர் தான் "நபி " ஆகும். என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.*

*ஹளரத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் பனூ இஸ்ரவேலர்களுக்கு அறிவு பூர்வமான தகவல்கள் வழங்கியதை திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.*

وأنبئكم بما تأكلون وما تدخرون في بيوتكم

*இன்னும் , நீங்கள் உண்பவற்றையும், நீங்கள் உங்கள் வீடுகளில் சேகரித்து வைப்பவற்றையும், பற்றி உங்களுக்கு நான் அறிவிப்பேன் 3 : 49*

*"நபி " என்பதும்* انبأكم *என்பதும் ஒரே மூலத்திலிருந்து வந்தவையாகும் என்பது கவனத்திற்கொள்ளத்தக்கது. நீங்கள் சாப்பிடுபவை , நீங்கள் சேமித்து வைப்பவை ஆகிய (*تأكلون وماتدخرون*) இருவாக்கியங்களும் எதிர்காலத்தைக் குறிப்பவையாகும்.*

*இச்சொல்லின் ஆரம்பத்தில் "லாம் " சேர்ந்து வந்தால் , நிகழ்காலத்தைக் குறிக்கும் இது போல் ஆரம்பத்தில் "ஸீன் " என்ற எழுத்து சேர்ந்து வந்தால் , எதிர்காலத்தைக் குறிக்கும் , இரண்டும் இல்லாவிட்டால், நிகழ்காலம், எதிர்காலம் இரண்டையும் குறிக்கும், இதன்படி, நீங்கள் நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும் உண்பவை, சேகரித்து வைப்பவையாவையும் அறிவேன்.*

*அதாவது, வயலில் விளையும் தானியங்கள் ஒவ்வொன்றும், தோட்டத்தில் விளைகின்ற ஒவ் வொரு கனிகள், கனிக்குள்ளிருக்கும் சாறு உள்ளிட்ட அனைத்தையும் அறிவேன்.*

*அதாவது, அவற்றைச் சாப்பிடுகின்றவர் , பருகுகின்றவர்கள் அனைவரையும் நான் நன்கு அறிவேன். இப்படியான அறிவுள்ளவர்தான் "நபி" ஆவார் , அதனால், படைத்தவனைப் பற்றியும் , படைப்புக்களைப் பற்றியும் தகவல்களை வைத்திருப்பவர் தான் "நபி " ஆவார்,*

*வைத்தியன் நோயாளியின் நரம் பைப் பிடித்து நோயைக் கூறுவது போன்று நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலை ஹிவசல்லம் அவர்களின் மணிக்கரம் ஒவ்வொரு உயிரிலும், ஈமானிலும் உள்ள நாடியிலிருக்கின்றது,*

*பின்வரும் ஆதாரங்களைக்கவனிமாகப் படியுங்கள் தெளிவு பெறுவீர்கள்*

*ஒரு தினம் இரவு நேரத்தில் அன்னை ஆயிஷா சித்திக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லத்திற்கு நபியவர்கள் வந்தார்கள். அன்று வானத்தில் நட்சதிரங்கள் நிறைந்திருந்தன . அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே ! வானத்தில் பூத்திருக்கும் நட்சத்திரங்களின் அளவு நன்மை செய்தவர் யாரு முண்டோ ? என்று அன்னை ஆயிஷா சித்திக்கா றழியல்லாஹு அன்ஹா கேட்டார்கள், .ஆமாம் உமர் இருக்கின்றார் என்று பதில் கூறினார்கள்,*

*அப்படியாயின், என் தந்தையின் நிலையாது ? என்று மீண்டும் கேட்க , ஹிஜ்ரத் செய்த இரவு அவர் செய்த அமல் உமரின் அனைத்து நன்மைகளை விடவும் மேலானது என்று பதில் கூறினார்கள் , பாருங்கள்!*

*இது எவ்வளவு பெரிய கேள்வி வானத்தால் தாரகைகள் பல்வேறு இடங்களில் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. சில வெளிப்பட்டும் சில மறைந்தும் சில சிறியவையாகவும் , சில பெரியவையாகவும் காணப்படுகின்றன. இவ்வாறே சிலர் குகையிலும் , சிலர் மலையிலும், வேறு சிலர் இருட்டிலும், மற்றும் சிலர் வெளிச்சத்திலும் அமல்கள் செய்கின்றனர்.*

*அன்னையவர்களின் கேள்வின் அர்ஷிலிருந்து பூமி வரை தொடர் பு பட்டிருக்கின்றது , இவை யாவற்றையும் நன்கு தெரிந்த ஒருவரால் மட்டுமே இக்கேள்விக்குப் பதில் கூற முடியும் , அதனால் அன்னையவர்களின் கேள்வியை ஒர் உருதுக்கவிஞர் இப்படிக் கூறுகின்றார்.*

*அண்ணல் உங்களின் சிரசு அர்ஷில் இருக்கின்றது , அகத்தின் பார்வை மண்ணைத்தொடுகின்றது, பௌதீகம், அதீதம் இரண்டிலும், உங்கள் பார்வையில் படாதவை எதுவும் இல்லை.*

*ஹளரத் ஹாரிதா றழியல்லாஹூ அன்ஹூ யுத்தத்தில் எங்கிருந்தோ வந்த அம்பினால் தாக்கப்பட்டு ஷஹீதானார்கள். இதைக்கேள்விப்பட்ட அவர்களின் தாயார் றஸூலுள் ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களிடம் வந்து , அல்லாஹ்வின் திருத்தூதரே ! எனது மகன் சொர்க்கத்திலிருப்பாராயின் , சகித்துக் கொள்வேன். அப்படியில்லாமல் வேறு விதமாக இருப்பாராயின் , மக்களுக்கு புரியும்படி சப்தமிட்டு மகனுக்காக அழுவேன் என்றார்.*

*இதைக் கேட்டு ஹாரிதா உன்னைப்போன்று தான் நானும் மதீனாவில் தான் இருக்கின்றேன் உனது மகன் இருக்கும் இடத்தைப் பற்றி நான் அறியேன் . சற்றுப்பொறுமை செய் ! ஜிப்ரயீல் வந்ததும் கேட்டுச் சொல்கின்றேன் என்று கூறவில்லை.*

*அல்லாஹ்வின் நல்லடியாளே ! சொர்க்கம் எட்டு உண்டு உமது மகன் உ யர்ந்த எட்டாவது சொர்க்கமாகிய ஜன்னத்துல் பிர்தௌஸில் இருக்கின்றார் என்று சுடச் சுடப்பதில் கூறினார்கள் - தகவல் வைத்திருக்கின்ற எங்கள் தாஹா நபியுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம வர்களாகும்.*
*ஆதாரம் : புகாரி ஷரீப்,*

*ஒரு தினம் உம்மு ஹாத்துல் முஃமின்கள் எல்லோரும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுடன் உரையாடிக்கொண்டிருக்கும் போது, அல்லாஹ்வின் திருத்தூதரே !*

ايها اول لحوقا بك يا رسول الله

*எங்களுள் உங்களை (வ பாத்தின் பின் , ) முதன் முதலாகச் சந்திப்பவர் யார் ? என்று கேட்டனர். அதற்கு மறு விநாடியே*

اطولكن يدا

*உங்களில் கை நீளமான வர் . என்று பதில் கூறினார்கள். இதைக் கேட்டு எங்கள் கைகளை அளந்தோம் .அன்னை ஸௌதா றழியல்லாஹு அன்ஹா எங்களில் நெட்டையானவர் அவரின் கைதான் அதிக நீளமாக இருந்தது. ஆனால்,*

*அன்னை பீவி சைனப் றழியல்லாஹு அன்ஹா அவர்கள் தான் எங்களில் முதன் முதலில் வபாத்தானார்கள்.*

*இதன் பின்பு தான் "கை நீளமானவர் " என்று நபியவர்கள் கூறியது "அதிகம் தர்மம் கொடுப்பவர் " என்பது புரிந்தது. அன்னை ஸைனப் அவர்கள் அதிகம் தர்மம் செய்பவர் என்பது குறிப்பிடத்தக்கது,*

*சுருக்கமான இந்தப் பதிலுக்குள் புதைந்து கிடக்கும் மர்மங்களை சிந்தித்துப் பாருங்கள் !*

*ஒவ்வொருவரின் மரணம் ஏற்படும் நேரம் எவருடைய மரணம் எப்போது வரும். ? வபாத்தின் வகை ? வபாத் ஈமானுடன் இருக்குமா ? இல்லையா? வபாத்தின் பின் தான் இருக்கும் இடம் உங்களுடன் வந்து சேருமா அல்லது வேறு எங்காவது இடம் செல்லுமா? ஏனெனில்*

*"முதன் முதலில் எங்களில் உங்களை வந்து சேருபவர் யார்? " என்று தான் கேட்டார்கள்.இந்தக் கேள்வி மறைவான ஐந்து விடயங்களில் ஒன்று. இதற்கு இது பற்றி எனக்குத் தெரியாது. ஜிப்ரியீல் வந்ததும் கேட்டுச் சொல்கின்றேன்.என்று நபியவர்கள் கூறவில்லை , கேள்வி கேட்டு மறுவினாடி பதில் கூறினார்கள் தகவல் கூறுகின்ற எங்கள் தாஹா நபி அவர்கள் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம்.*

*ஒரு தினம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்கள் இரு கப்றுகளைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தார்கள் அப்போது அவ்விரு கப்றுகளையும் சுட்டிக்காட்டி இக்கப்றுவாசிகள் இருவரும் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். பெரும் குற்றமல்ல சாதாரணமான குற்றம் தான்.*

*ஒருவர் கோள் சொல்பவர் மற்றவர் சிறுநீர் சுத்தத்தில் பொடு போக்கானவர். என்று கூறிவிட்டு*

*பச்சையான ஒரு பேரீத்தை மட்டையை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்றிலும் நட்டார்கள். இதில் பசுமை இருக்கும் வரை அவை " தஸ்பீஹ் " செய்யும். அதன் பறக்கத்தினால், கப்றாளிகளின் வேதனை குறையும் என்று விளக்கம் பகர்ந்தார்கள்,*

*இந்த ஹதீதிலிருந்து பின்வரும் மார்க்கச் சட்டங்கள் வருகின்றன*

*1 - நபியவர்களின் பார்வைக்கு மண் தடையில்லை. மறைவானதையும் , நேரிலிருப்பதையும் நபியவர்கள் சமனாகவே பார்க்கின்றார்கள்*

*கப்றின் வேதனை பல அடி ஆழத்தில் மண்ணுக்குள் நடக்கும் செய்தி - ஆனால் , நபியவர்கள் மண்ணுக்கு மேலிருந்து கொண்டு மண்ணுக்குள் நடக்கும் வேதனையைக் குறிப்பிடுகின்றார்கள்*

*2 - ஒல்வொருவரின் நல்லது கெட்டதுகளை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் அறிந்து வைத்துள்ளார்கள்.கப்றில் வேதனை செய்யப்படுகின்றவர்கள் செய்த குற்றம் நபியவர்களுக்கு முன் நடந்தவையல்ல ! ஆனாலும் , நபியவர்களுக்குத் தெரிந்துள்ளது , இதன் படி , நபியவர்கள் ஒவ்வொருவருடைய அமல்களையும் அறிந்துவைத்துள்ளார்கள்,*

*இது தான் தகவல் களஞ்சியமான எங்கள் தாஹா நபியின் தகுதி கப்றில் பச்சையானவற்றை நடுவது ஸுன்னத் என்பதும் அதனால் , வேதனை குறையும் என்பதும் இதன் மூலம் தெரிய வருகின்றது.*

*நபியின் பொருள் உதவி செய்பவர்.*

*றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்கள் உலகத்திலும் கப்று , மஹ்ஷர் உட் பட அனைத்து இடங்களிலும் தனது உம்மத்தினருக்கு உதவி செய்கின்றார்கள். அவர்களைப் பாதுகாக்கின்றார்கள், முறைப்பாட்டைக் கேட்கின்றார்கள்,*

*மறுமையில் படைப்புக்களின் -முறைப்பாட்டை நபியவர்கள் முதன்முதலாகப் பாரமெடுப்பார்கள். இதற்குப்பிற்பாடு தான் விசாரணை ஆரம்பமாகும்.இதன்படி,*

*மறுமையின் ஆரம்பம் றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் உதவியுடன் தான் ஆரம்பமாகின்றது. இது பற்றிய விரிவான விளக்கம் புகாரி. முஸ்லிம் உள்ளிட்ட ஹதீதுப் பெருநூற்களில் காணலாம்,*

*மறுமையில் முதன் முதலில் ஷபாஅத் செய்யும் தகுதியுடையவரைத் தேடுவதில் முஹத்தித் , முபஸ்ஸிர் உலமா, புகஹா, அவ்லியா, சூபிகள், கௌது , குத்பு உள்ளிட்ட அனைவரும் இருப்பார்கள்.*

*ஷபாஅத்தின் கிரீடம் அன்றைய தினம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் சிரசில் தான் இருக்கின்றது என்பதை அப்போது எவரும் அறியமாட்டார்கள் , ஆனால்,*

*உலகத்தில் வாழும் போது ஷபாஅத்தின் வாசலை றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம வர்கள் தான் திறப்பார்கள் என்ற அகீதாவைத்தான் கொண்டிருந்தும், அச்சந்தர்பத்தில் சகலதையும் மறந்து விடுவார்கள்.*

*அனைவரும் தங்களின் கியாசின் - அனுமானத்தின் _அடிப்படையில் தான் ஷபாஅத்திற்காக ஏனைய நபி மார்களிடம் செல்வார்கள். அவர்களும் கூட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் முகவரியை மறந்து விடுவார்கள். ஒரு விதமான கற்பனையில் தான் ஹளரத் ஆதம் , ஹளரத் நூஹ் , ஹளறத் இப்றாஹீம் , ஹளறத் மூஸா, அலைஹிமுஸ்ஸலாம் உள்ளிட்டோரிடம் செல்வார்கள், இவர்களும் கற்பனையில் தான் அடுத்தவர்களின் முகவரியைக் கூறுவார்கள். ஆனால் , இவர்களுள் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மட்டும் தான் நபியவர்களின் முகவரியைக் கூறுவார்கள், இதில் பொதிந்திருக்கும் தத்துவம் யாது ?*

*இவர்கள் அனைவரும் முதன் முதலாக றஸு லுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களிடம் சென்றிருந்தால் , ஷபாஅத் நடந்திருக்கும் , இதில் நபியவர்களுக்குத் தனியான விஷேஷம் இல்லையென்று சிலர் நினைக்கக்கூடும். சந்தர்ப்பவசமாக இங்கு வந்தோம் ஷபாஅத்தும் நடந்தது வேறு ஒரு நபியிடம் சென்றிருந்தாலும், ஷபாஅத் நடந்து தானிருக்கும், அதனால்*

*எல்லோருடைய மூளையையும் சுத்தப்படுத்துவதற்காக ஆரம்பத்தில் அனைத்து வாசல்களிலும் முட்டி மோதி விட்டு முடிவில் ஷபாஅத்தின் வாசல் இங்கு தானிருக்கின்றது என்பதை அறிய வேண்டும் என்பதற்காகவே அல்லாஹுத்தஆலா இந்த ஏற்பாட்டைச் செய்தான்,*

*சஹாபாக்கள் தங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்களிடம் வந்து அல்லாஹ்வின் திருத்தூதரே ! மழை இல்லை என்பார்கள். மழை அதிக மானால் மழை அதிகம் என்பார்கள். அல்லாஹ்வின் திருத்தூதரே ! நான். பாவம் செய்து விட்டேன் பரிகாரம் தேடி உங்களிடம் வந்துள்ளேன் என்பார்கள்,*

*மக்கத்து குறைஷிக் காபிர்களும் தங்களின் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக நபியவர்களிடமே வருவார்கள்,*

*மிருகங்களும் தங்களின் கவலையைப் போக்க நபியவர்களிடமே வந்து முறையிடும் , மிருகங்கள், கல், மரம், உள்ளிட்ட அனைத்தினதும் முறைப்பாட்டை ஏற்பர்கள் என்பதை அவையாவும் அறிந்து வைத்துள்ளன தனது கோரிக்கையை ஏற்று பரிகாரம் செய்பவரிடம் தான் கோரிக்கையையைவைக்க முடியும். அதனால் , தகவலறிந்தும், தகவல்களைப் பெற்றும்உதவி செய்யக்கூடிய நபியை நம்பி அவர் வழி செல்ல விளையுங்கள்.*

*ஈமான்*

*இச்சொல் " அம்னு " என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்ததாகும். பாதுகாப்பு வழங்கல் - எனபது இதன் பொருள்.இது அல்லாஹ்வின் பண்புமாகும் , இதனால் தான் அவனது பண்புகளில் "முஃமின் " என்பதும் ஒன்று அதாவது, தனது அடக்கு முறையிலிருந்தும் , தண்டனையிலிருந்தும் தனது நல்லடியார்களுக்குப் பாதுகாப்பு வழங்குபவன், என்பது இதன் பொருள்.*

*இச்சொல் அடியானின் பண்பாகவும் இருக்கின்றது. இதனால் தான் திருக்குர்ஆனில் முஸ்லிம்களை முஃமின் - என்று அல்லாஹுத் தஆலா குறிப்பிடுகின்றான். அதாவது ,சீரான "அகீதா "வைத் தெரிவு செய்து , தன்னை றப்பின் தண்டனையிலிருந்து பாதுகாப்புப் பெறுபவர் , ஷரீஅத்தில் இந்த அகீதாவுக்குப் பெயர்தான் "ஈமான் "*

*ஈமானைப் பரீட்சித்துப் பார்பதன் மூலமே குப்றிலிருந்து மனிதன் தன்னைப் பாதுகாத்துக் கொள்கின்றான் உலகத்தில் உள்ள பொருட்கள் யாவற்றிலும் உடலும் உயரும் உண்டு. உயிரில்லாத உடலுக்குப் பெறுமதி இல்லை. உடலில் உயிர் இருக்கும் வரை உடலுறுப்புக்களுக்குப் பெறுமதி உண்டு உயர்தரமான அறுசுவை உணவு, பெறுமதிமிக்க ஆடை ஆடம்பர மாளிகை , அதிகாரம், ஆட்சி உள்ளிட்ட அனைத்தும் உயிருள்ள உடலுக்குத் தான் , உடலை விட்டும் உயிர் பிரிந்து விட்டால் எதற்கும் அது உதவாது. மண்ணில் புதைக்க வேண்டியது தான்,*

*மரத்தில் உயிர்இருக்கும் வரை தான் பசுமை , பூ, காய், கனி எல்லாம்இருக்கும். உயிரோட்டம் முடிந்து விட்டால் அதற்குப் பெயர் விறகு . எரிப்பதற்குத்தான் அது பயன்படும் ,*

*மின்சார உபகரணங்களில் மின்சாரம் இருந்தால் தான் அதில் பயன் உண்டு. இல்லாவிட்டால் வீண் தான் இவ்வாறு, நோன்பு, தொழுகை, ஹஜ், சக்காத், ஈமான் உள்ளிட்ட இவையனைத்திற்கும் ஓர் உடலும், உயிரும் உண்டு. உயிரோட்டமுள்ள வணக்கத்திற்குத் தான் அல்லாஹ்விடத்தில் பெறுமதி உண்டு உயிரோட்டமில்லாத வணக்கத்திற்கும் ஏனையவற்றிற்கும் எந்தப் பெறுமதியும் கிடையாது.*

*கலிமாவை மொழிவதும் , ஈமானின் சுருக்கமான அல்லது , விரிவான பகுதிகளை ஏற்றுக் கொள்வதும் ஈமானின் உடலாகும் , ஈமானின் உயிர் வேறு நுபுவ்வத்தை உலூஹிய்யத்தோடு சேர்ப்பதும், நபியை அல்லாஹ்வோடு சேர்ப்பதும் தான் ஈமானின் உயிராகும்,*

*அல்லாஹ்வையும், றஸூலையும் யாராவது , எங்காவது பிரித்தால். காபிராகிவிடுவான். அல்லாஹ்வையும், றஸூலையும் சேர்பவனே முஃமினாவான்,*

*திருக்குர்ஆனின் தீர்ப்பைக்கவனியுங்கள் !*

ان الذين يكفرون بالله ورسله ويريدون ان يفرقوا بين الله ورسله ويقولون نوئمن ببعض ونكفر ببعض ويريدون ان يتخذوا بين ذلك سبيلا اولئك هم الكفرون حقا واعتدنا للكفرين عذابا مهينا

*நிச்சயமாக எவர்கள் அல்லாஹ்வையும் , அவனுடைய றஸுல்களையும் , நிராகரித்து , அல்லாஹ்வுக்கும், அவனுடைய றஸூல்களுக்குமிடையே பாகுபாடு செய்வதை விரும்பி (*

*றஸூல்களில் ) சிலர் மீது நாங்கள் ஈமான் கொள்கின்றோம் (மற்றும் ) சிலரை நிராகரிக்கின்றோம் என்று கூறி (ஈமான் , குப்று ஆகிய) இவற்றிற்கிடையே ஒரு (புதிய)வழியை உண்டாக்க விரும்புகிறார்களோ இத்தகையோர் தாம் உண்மையான காபிர்கள் (இத்தகைய) காபிர்களுக்கு இழிவு தரும் வேதனையை நாம் சித்தப்படுத்தி வைத்துள்ளோம், 4_ 150, 151*

*அல்லாஹ்வுக்கும், றஸூலுக்கு மிடையில் பிரிவை ஏற்படுத்துவது குப்று என்பதும் அல்லாஹ்வையும், றஸூலையும் இணைப்பது சுத்தமான ஈமான் - என்பதும் திருக்குர்ஆனின் தீர்ப்பாகும் றஸூலை அல்லாஹ் என்று கூறுவதோ , அல்லது , அல்லாஹ்வை ற ஸூலாக்குவதோ இதன் பொருள் இல்லை. அல்லாஹ் அல்லாஹ் தான், றஸூல் றஸூல் தான். இருவரையும் இணைப்பது எப்படி என்பதை ஓர் உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்ளுங்கள்.*

*நாணயத்தாளில், காகிதமும். அரச முத்திரையும் உண்டு முத்திரை காகித மல்லகாகிதம் முத்திரையல்ல இரண்டிற்குமிடையிலுள்ள உறவு யாதெனில் , காகிதத்ததிலிருந்து அரச முத்திரையை அகற்றிவிட்டால் காகிதம் பெறுமதியற்றதாகிவிடும்,*

*விளக்கின் சி மிளியின் நிறம் திரியின் வெளிச்சத்தில் கலந்து விட்டது. விளக்கின் வெளிச்சம் படரும் இடமெங்கும் சி மிளியின் நிறமும் கலந்திருக்கும்*

*திருக்குர்ஆன் கூறுகின்றது*

مثل نوره كمشكوة فيها مصباح المصباه في الزجاجة

*அவனுடைய ஒளிக்கு உதாரணம் ஒரு மாடத்தைப் போன்ற தாகும் , அதில் ஒருவிளக்கு இருக்கின்றது, அவ்விளக்கு ஒரு பளிங்குக்கோளத்திலிருக்கின்றது, 24 : 35*

*இத்திருவசனத்திற்குப் பல விளக்கங்கள் இருக்கின்றன. அவற்றில் இதுவும் ஒன்று . அதாவது , இறைவனைப் பற்றிய தௌஹீத. ஒளியைப் போன்றது. முஹம்மது முஸ்தபாஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் புனித திருமேனி பளிங்குக்கண்ணாடி போன்றுள்ளது.*

*சற்று சிந்தனை செய்து பாருங்கள். கலிமாத் தைய்யிபா என்பது தான் தௌஹீத் ஆகும் , இதில் தௌஹீதுக்குப் பின் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்ல மவர்களின் றிஸாலத்தைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது.*

*இதன் ஒழுங்கைப் பாருங்கள் முற்பகுதி லா இலாஹ இல்லல்லாஹ் என்றுள்ளது. இதில், அல்லாஹ் என்ற சொல் இறுதியாக வந்துள்ளது. மறு பகுதி முஹம்மதுற் றஸூலுள்ளாஹ் இதில் கண் மணி நாயகத்தின் திருப் பெயர் முதலில் வந்துள்ளது,*

*இவ்வாறு கூறப்பட்டதன் நோக்கம் அல்லாஹ்வின் திருநாமம் றஸூலின் திருநாமத்தோடு சேர்ந்திருக்கவேண்டும் .பிரியக் கூடாது. என்பது தான்.*

*திருக்கலிமாவில் தனது பெயரும், தனது ஹபீபின் பெயரும் இணைந்திருக்க வேண்டும் என்று அல்லாத் தஆலா விரும்பும் போது தன்'னையும், தனது ஹபீயையும் பிரிக்க விரும்புவானா ?*

*திருக்குர்ஆனில் பல இடங்களில் தனது பெயரை தனது ஹபீபின் பெயரோடு சேர்த்துக் கூறப்பட்டிருப்பதைக் கவனியுங்கள்,*

_1 يا ايها الذين امنوا اطيعوا الله واطيعوا الرسول

*முஃமின்களே ! அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள். இன்னும் (அவன்) றஸூலுக்கும் வழிப்படுங்கள். 4 : 59*

_2 ومن يطع الله ورسوله فقد فاز فوزا عظيما

*எவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய றஸூலுக்கும் வழிப்படுகின்றாரோ , திட்டமாக அவர் மகத்தான வெற்றியாக வெற்றியடைந்து விட்டார், 33 : 72*

_3 والله ورسوله احق ان يرضوه ان كانوا موئمنين

*அல்லாஹ்வும், அவனது றஸூலும் தான் அவர்களை அவர்கள் திருப்திபடுத்துவதற்கு மிக்கத் தகுதியானவர்கள். 9. 62*

_4 وما نقموا الا ان اغنهم الله ورسوله من فضله

*அல்லாஹ்வும் அவனுடைய றஸூலும் அவனுடைய அருட் கொடையினால் அவர்களைச் சீமான்களாக்கி வைத்ததற்காகவே தவிர, (எதற்கும் உங்களை) அவர்கள் வெறுக்கவில்லை. 9 _ 74*

_5 ومن يخرج من بيته مهاجرا الي الله ورسوله ثم يدركه الموت فقد وقع اجره علي الله

*எவரேனும் தம் வீட்டை விட்டு அல்லாஹ்வின் பக்கமும் , அவனுடைய றஸூலின் பக்கமும் ஹிஜ்ரத் செய்த வராகப் புறப்பட்டு . பின்னர் , அவரை மரணம் வந்தடைந்து விட்டால் , அப்பொழுது அவருடைய (நற்) கூலி அல்லாஹ்வின் மீது திடமாகக் கடமையாகிவிட்டது. 4: 100*

_6 لا تقدموا بين يدي الله ورسوله

*முஃமின்களே ! அல்லாஹ்வுக்கும் , அவனுடைய றஸூலுக்கும் முன்னர் நீங்கள் முந்த வேண்டாம். 49 : 1*

_7 امنوا بالله ورسوله

*அல்லாஹ்வின் மீதும், அவனுடைய றஸூ லின் மீதும் நீங்கள் ஈமான் கொள்ளுங்கள். 57 : 7*

_8 ولو انهم رضوا ما اتهم الله ورسوله

*நிச்சயமாக அவர்கள், அல்லாஹ்வும், அவனுடைய ற சூலும் அவர்களுக்குக் கொடுப்பதைக் கொண்டு திருப்தியடைந்து ...9- 59*

_9 وقالوا حسبنا الله سيئتينا الله من فضله ورسوله انا الي الله راغبون

*அல்லாஹ் எங்களுக்குப் போதுமானவன்., அல்லாஹ் தன் கருணையாலும் , அவனுடைய றஸூலும் எங்களுக்கு விரைவில் (மிகுதத்தை) வழங்குவார்கள். நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின்*

*பக்கமே பிரியங்கொள்பவர்களாக இருக்கின்றோம் , என்று கூறுவார்களானால் .... (அது அவர்களுக்கு மிக நல்லதாகும்,) 9 : 59*

واذ تقول للذي انعم الله عليه وانعمت عليه *10_*

*எவர் மீது அல்லாஹ் அருள்செய்து, அவர் மீது நீரும் அருள் செய்தீரோ .. 33 : 37*

*றஸூலுள் ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் ஆஸ்தானப்புலவர் ஹளறத் ஹஸ்ஸான் இப்னு தாபித் றழியல்லாஹூ அன்ஹூ பின்வருமாறு பாடு கின்றார்கள*

ضم الاله اسم النبي باسمه اذ قال في الخمس الموءذن اشهدوا

*அல்லாஹூத் ஆலா தனது நயியின் திருப்பெயரைத்தனது திருப்பெயரோடு ஐவேளைத் தொழுகைக்குச் சொல்லப்படும் அதானில் முஅத்தின்*

اشهد ان لااله الا الله

*என்றும்,*

واشهد ان محمدالرسول الله

*என்றும் கூறுகின்றார்.*

*ஹளரத் ஹஸ்ஸான் இப்னுதாபித் றழியல்லாஹு அன்ஹூ அவர்கள் சஹாபாக்களுள் பாக்கியம் பெற்ற புலவராகும் .இவரின் ஒவ்வொரு பாசுரத்திற்கும் நபிகள் திலகம் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமலர்கள் ஆடி அசைந்து துஆச் செய்வார்கள். அன்னாரின் கவிதைகள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் முழு அங்கீகாரம் பெற்றவையாகும். ..*

*இஸ்லாத்தின் கடமைகளை உற்று நோக்கிப் பாருங்கள் , கடமையான அனைத்து இபாதத்துக்களிலும் தனது ஹபீப் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் சுன்னத் துக்களை சேர்த்துள்ளான். சுன்னத்துக்கள் இல்லாத வணக்கங்களைக்காணவே முடியாது,*

*ளுஹர் தொழுகையின் பர்ளுகள் நான்கு , முன் பின் சுன்னத்துக்கள் - ஆறு. மங்ரிப் தொழுகையின் பர்ளுகள் மூன்று . சுன்னத்துக்கள்.நான்கு. இவ்வாறு ஒவ்வொரு பர்ளுகளிலும், ஒரு சுன்னத் சேர்க்கப்பட்டுள்ளது. றமழானில் நோன்பு நோற்பது பர்ழு சஹர் , இப்தார் ,தறாவீஹ் சுன்னத் தனது வாழ்வை சற்று சிந்தித்துப் பாருங்கள். குழந்தை பிறந்ததும் காதில் அதான் சொல்வது சுன்னத் அகீகா கொடுப்பது சுன்னத் கத்னா செய்வது சுன்னத் (ஷாபிஈ மத்ஹபில் வாஜிப் குழந்தையைப் பராமரிப்பது சுன்னத் தினமும் உழைப்பது , உண்பது, திருமணம் மனைவியைப் பராமரிப்பது உள்ளிட்ட அனைத்தும் சுன்னத் .ஆகும்.*

*மரண வேளையில்கலிமாச் சொல்லிக் கொடுப்பது .மய்யித்தை கஃபாவுக்கு நேராக வைத்தல் மூன்று அல்லது ஐந்து சுற்று க் கபன் அணிவிப்பது குளிப்பாட்டும் .அடக்கம் செய்யும் முறைகள் யாவும் சுன்னத் ஆகும்.*

*எல்லா இடங்களிலும் பர்ளுடன் சுன்னத்தும் சேர்ந்திருக்கின்றன. இதனால் தான் நம்முடைய பெயர் அஹ்லுல் பர்ளு , அஹ்லுல் வாஜிப் அஹ்லுல் முஸ்தஹப்பு என்றில்லாமல் " அஹ்லுஸ் ஸுன்னத் " என்றுள்ளது.*

*அதாவது, வாழ்நாள் பூராவும் சுன்னத் தின் நிழலிலே வாழ்கின்றவர்கள். மறுமையில் கன்னத்திற்குரிய வரின் நிழலின் கீழ் இருப்பவர்கள் , அதனால், ஈமானின் உயிர் அல்லாஹ்வையும் , றசூலையும் சேர்ப்பதில் தான் இருக்கின்றோம்.*

*ஷைத்தானும், பல்வேறுபட்ட காபிர்களும் அல்லாஹ்வின் தாத் , ஸிபாத், மலக்குகள், சொர்க்கம், நரகம் உள்ளிட்ட அனைத்தையும் நம்புகின்றனர். பின்னர் அவர்கள் அல்லாஹ்வையும் , றசூலையும் பிரித்ததனால் தான் காபிரானார்கள்.*

*வயலுக்கு நீர் பாய்ச்சுவது தொடர்பான ஒரு வழக்கை ஓர் அன்சாரி சஹாபி றஸூலுள்ளாஹி சல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களிடம் எடுத்துச் சென்றார்,*

*றஸூலுள் ளாஹி ஸல்லல்லா ஹு அலைஹி வசல்லமவர்கள் வழங்கிய தீர்ப்பை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை, உடனே பின்வரும் திருவசனத்தை அல்லாஹுத்தஆலா இறக்கினான்*

فلا وربك لايوء منون حتي يحكموك فيما شجر بينهم ثم لا يجدوا في انفسهم حرجا مما قضيت ويسلموا تسليما

*உம்முடைய றப்பின் மீது ஆணையாக ! அவர்கள் தம்மிடையே பிணங்கிக் கொண்ட ( விஷயத்)தில் உம்மை அவர்கள் நீதிபதியாக்கி பிறகு நீர் தீர்ப்பளித்ததைப் பற்றித் தம் மனங்களில் எவ்வித அதிருப்தியையும் காணாமல் , (உம்முடைய தீர்ப்பை ) முற்றிலும் அவர்கள் ஏற்றுக் கொள்ளாத வரை அவர்கள் ஈமான் கொண்டவர்களாக ஆக மாட்டார்கள், 4 : 65*

*நபியவர்களின் அவையில் சிலர் நபியவர்களின் சப்ததை விட சற்று அதிகமாப் பேசினர்.இவ்வாறு நபியவர்களுக்கு முன் சப்தம் உயர்த்திப் பேசுவதை அல்லாஹூத்தஆலா விரும்பவில்லை. உடனே பின்வரும் திருவசனம் இறங்கியது,*

يا ايها الذين امنوا لا ترفعوا اصواتهم فوق صوت النبي ولا تجهروا له بالقول كجهر بعضكم ان تحبط اعمالكم وانتم لا تشعرون

*முஃமின்களே ! உங்களுடைய சப்தத்தை நபியுடைய சப்தத்திற்கு மேல் உயர்த்தாதீர்கள் மேலும், உங்களில் சிலர் சிலரிடம் இரைந்து பேசுவது போல் அவரிடம் பேசுவதில் இரைந்து பேசாதீர்கள், (ஏனெனில்,) நீங்கள் உணர்ந்து கொள்ளாத நிலையில் உங்களுடைய (நற்) செயல்கள் அழிந்துவிடும். 49 : 2*

*பாருங்கள் !*

*அன்சாரித்தோழரும், நபியவர்களுக்கு முன்னால் சப்தமிட்டுப் பேசியவரும் ஈமானிய அகீதாவில் உள்ள ஒன்றையும் மறுக்கவில்லை தௌஹீத் , மலக்குகள் சொர்க்கம், நரகம் உள்ளிட்ட யாவற்றையும் உறுதிப்படுத்தி. நுபுவ்வத்தையும் மறுக் காவிட்டாலும்,*

*நுபுவ்வத்துடன் தொடர்பாக இருக்கும் அவசியக் கடமைகளில் ஏதாவதொன்றில் கூட மரியாதைக்குறைவு செய்தாலும் அதாவது அன்னாரின் மீதுள்ள ஒழுக்கம் அவர்கள் மீது வைக்கவேண்டிய உறுதிப்பாடு உள்ளிட்டவையில் குறை ஏற்படின் அதனையும் அல்லாஹுத்தஆலா குப்றாகவே பார்க்கின்றான். ஏனெனில் , நன்மைகள் குப்றினால் தான் அழிந்துவிடும், இப்போது புரிகிறதா ?*

*அகீதாக் கோட்பாடுகள் யாவும் ஈமானின் புறத்தோற்றங்கள் தான் , ஈருலக வேந்தர் கோமான் எங்கள் தாஹா நபியின் ஒழுக்கம் . மரியாதை. கண்ணியம் இவைதாம் "ஈமானின் " றூஹ் - உயிர் - ஆகும், அதனால்,*

*ஈமானின் மூலச் சக்கரமாகிய அண்ணலம் பெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்களின் மீது அன்பு, பாசம் வைத்து ஈமானைப்பிரகாசமாக்கி உயிருள்ள தாக்கிய கூட்டத்தில் என்னையும், உங்களையும் சேர்த்தருள்வானாக !*

*ஆமீன்*